*Muracoli*
*[Muracu 3, oli 3]*
*April 20, 1956*

Record no. 945



# அவரது அந்தரங்கம்!

*பிரிவுபசாரம் நடத்தி, மாலைகள் போட்டு வழியனுப்பி வைக்கலாம், என்று காமராசர் ஆசையோடு காத்திருக்கும்போதே, திடீரென்று ராஜிநாமாக் கடிதத்தைக் கொடுத்து விட்டு சட்டசபைக் காங்கிரஸ் கட்சியிலிருந்து ஓடி விட்டார், ஆச்சாரியார்!*

*அவர் ராஜிநாமாக் கடிதத்தை எழுதப்போகும் காலை, அவருள்ளத்தில் என்னென்ன நினைவுகள் தோன்றின என்பதைக் கற்பனைக் கண் கொண்டு பார்ப்பதுதான் கீழேயுள்ள வரிகள்!*

ராஜிநாமாக் கடிதத்தில் கையொப்பமிடப் போகிறேன்; ஆகா! இந்தப் பதவிக்காக எவ்வளவு கஷ்டப் பட்டேன்!

காமராசர் இன்று கடோற்கஜனைப் போல இருக்கிறார்; எவ்வளவு தடவை அன்று என் வீட்டுப் படிகளில் ஏறி இறங்கியிருக்கிறார்!

''இந்த முறை மறுக்காதீர் நீங்கள் 'இல்லை' என்றால் தென்னாட்டில் காங்கிரசுக்கே உயிரில்லை; உத்தமரே! மெத்தை பதித்த முதல் மந்திரி ஆசனம் அழைக்கிறது, சொத்தைகள் என்று எமைத் தள்ளி விட்டார், ஓட்டுக் கத்தைகளை எதிர்க்கட்சியினர் பெட்டியிலே திணித்து விட்ட பொது மக்கள்! சரி என்று சொல்வீர்; சரிந்து வரும் காங்கிரஸ் கோட்டையைத் தூக்கி நிறுத்தி, கரி பூசப்பட்ட எங்கள் முகத்தைத் துடைத்தருள்வீர்!''

—காமராசர்தான் அன்று என்னிடம் பேசினார்; உண்மையைச் சொல்வதற்கென்ன; காலைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினார்!

நான் என்ன, முற்றும் துறந்த விஸ்வாமித்திரரா? அவர் கூட மோகனாங்கி மோகினியைப் பார்த்து சித்தம் சோரவில்லையா!

நானும் சம்மதித்தேன்; கவர்னர் எனக்காக ஒரு ஸ்தானத்தை சிருஷ்டித்து, கொல்லைப் புறமாக சட்ட சபைக்குள்ளே என்னை வரித்துக் கொண்டார்!

பிரபல எழுத்தாளர்கள்; கலைஞர்கள்;—இவர்களுக்கு மட்டுமே திறக்க வேண்டிய வாசல், எனக்குத் திறந்தது!

அய்யோ; பதவித் தேனடையைப்பிடிக்க எந்த அங்கத்தினர் பதவியை ஏணியாக உபயோகித்தேனோ அதையே இன்று உதைத்தெறிய வேண்டிய நேரம் வந்து விட்டதே, எனக்கு!

போன ஜன்மத்தில் என்ன பாப காரியம் செய்தேனோ; யாருடைய வயிற்றில் மண்ணை வாரிப் போட்டேனோ இன்று நான் 'ஆளாய்ப் பறக்கிறேன்!'

சொல்வதற்கு வெட்கப்படுவானேன்; கிழட்டு நரியாகி விட்டேன் நான்!

பிணத்தைக் கண்டம் கண்டமாகக்கிழித்தெரியும் என் நகங்கள் கூர் மழுங்கிப் போய் விட்டன; பற்கள் தேய்ந்து விட்டன; என் தந்திரங்களெல்லாம் பழைய பத்தாம் பசலியாகி விட்டன!

பெரும் பெரும் சிங்கங்களையெல்லாம் சாய்த்திருக்கிறேன், நான்! சிங்கத்தைவிட வலிமை பெற்றிருந்த ராமசாமி நாயக்கரை திருவண்ணாமலையில் சந்தித்து, அவருடைய குடும்பத்துக்கே நெருப்பு வைக்கும் யோசனைக்கு ஊககம் தரவில்லையா?

அப்படிப்பட்ட என்னைத்தான் காகங்களும் கொத்தி மகிழ்கின்றன, இன்று!

என் கடைசித் தந்திரம்—அது கூடப் பலிக்கவில்லையே!

தட்சிணப் பிரதேசம்—இந்த யோசனை மட்டும் ஏற்றுக்கொள்ளப் பட்டிருந்தால் பசுல்லா ரோட்டிற்கு மீண்டுமொரு 'மவுசு' ஏற்பட்டிருக்குமே; என் வீட்டைச் சுற்றி போலீஸ் 'பாரா' தோன்றியிருக்குமே! அய்யோ; அவ்வளவும் பாழ்! பாழ்!!

தட்சிணப் பிரதேசம் தோன்றியிருந்தால் ஆகா! இந்த 'நாடார்' மறுபடியும் விருதுநகருக்கல்லவா ஓட வேண்டும்! அரிச்சுவடி படித்திருக்கும் இவருக்கு தெலுங்கு பேசும் ஆந்திரரையும், மலையாள மாந்தரையும், கன்னடத்து மக்களையும் கட்டியாள முடியுமா?

நிச்சயம் மறுபடியும் என் காலில்தான் விழுந்து அழுவார்கள். அப்போது நான் என்ன செய்வேன் தெரியுமா?

''ஓய், காமராசரே! முடியாது; முடியாது! எனக்கு ஓய்வு வேண்டும்! வேறு யாரையாவது வைத்துப் பார்த்துக் கொள்ளுங்கள்.''

அவர்களா போவார்கள்? என் காலைப் பிடித்துக் கொள்வார்கள்! என் கால்களால் இப்படி உதறித் தள்ளுவேன்...அடடா! என்ன இது! என் எதிரேயிருந்த மைக்கூட்டை உதறித் தள்ளிவிட்டேனே... தரையெல்லாம் மை! கண்ணாடி வியாபாரியின் கதையாகவல்லவோ ஆகிவிட்டது, நான் கண்ட கனவு!

இருக்கட்டும்; இருக்கட்டும்! என்றைக்கிருந்தாலும் ஒருநாள் அந்த முதல் மந்திரி ஆசனத்தில் அமராமலா போகப் போகிறேன்! உயிர் போவதாயிருந்தாலும் நான் 'செகரெட்டரியேட்'டில் உட்கார்ந்து கொண்டு பைல்களைப் புரட்டும் போதே போக வேண்டும்!

அப்போது என்ன ராஜ மரியாதைகள் நடைபெறும் தெரியுமா? முதல் மந்திரிக்கான தகனமல்லவா நடக்கும்!

—அதைவிட்டு, சாதாரண ஆச்சாரியாகச் — மாஜியாகச் — சாவதிலே என்ன பிரயோசனம் இருக்கிறது!

திருப்பாற் கடலில் பள்ளி கொண்டிருக்கும் எம்பெருமானே! அடுத்த ஜென்மத்தில் என்னை பதவிக்கு வருகின்ற கட்சிக்காரன் வீட்டிலேயே பிறக்கும்படி வரம் கொடு. அதுவும் அந்தக் கட்சியில் பிரபலமாயிருக்கும் ஒரு தலைவர் மகனுக்குப் பெண் கொடுத்து சம்மந்தியாகிறப் போல சந்தர்ப்பங்களை யெல்லாம் சிருஷ்டி செய்து கொடு!

இன்னொன்று; முக்கியமான செய்தி. — அடுத்த ஜன்மத்தில் நான் பிறந்து வளர்ந்து முதல் மந்திரி பதவி வகிக்கிற வரையில் நிச்சயமாக காங்கிரஸ் உயிரோடு இருக்காது. தென் இந்தியாவைப் பொறுத்த வரைக்கும் அநேகமாக அந்தக் 'கழகத்துக்காரர்கள்' செல்வாக்குப் பெற்று விடுவார்கள்.

என்னப்பனே! உன் பக்கத்திலிருக்கும் மகா லட்சுமியாரின் பாதாரவிந்தங்களை மீண்டுமொரு தடவையாவது தொட்டுக் கும்பிடுகிறேன். நாட்டை ஆளும்வாய்ப்பு அந்தக் கழகத்துக்காரர்களுக்குக் கிடைக்குமானால், என்னை மறு பிறப்பில் அந்தக் கட்சியிலேயே முக்கியஸ்தனாகப் பிறப்பித்து விடு!

ஆனால், ஆகஸ்ட் போராட்டத்தைப் போல, ஏதாவது ஒரு போராட்டத்தில் கலந்து கொண்ட பிறகுதான் அது போன்ற 'தகுதி'கள் கிடைக்கு மென்றால்—பள்ளி கொண்ட பெருமாளே! இந்த உடம்பு தாங்காது!-என்னை அந்தத் தொந்தரவுகளிலிருந்து மட்டும் காப்பாற்றி விடப்பா!

தியாகம் செய்ய முடியாது; வேண்டுமானால் யோக நிஷ்டை செய்து விடுகிறேன்!

ஜெயில் வேண்டாம்; 'ஜே' கோஷம் மட்டும் வேண்டும்!

சீரங்கத்துச் செல்வனே! இரு மடங்கு 'புளியோதனம்' படைக்கிறேன். எனக்கு இந்த வரத்தை மட்டும் தந்தருளப்பா!

## 'விகடன்' விளக்கம்!

ஏக பாரத மென்னும் 'ஓட்டலில்' தென்னகத்தோருக்கு இழைக்கப்படும் அநீதியை 'ஆனந்த விகடன்' ஏடு, *15—4—56-ந் தேதிய இதழில் இப்படிச் சித்திரம் தீட்டி விளக்கியிருக்கிறது !*



# தலையங்கம்

ஆண்ட இனத்தால் மீண்டும் முற்றுகை; மாண்டிடும் புழுவே மகுடம் கழற்று!

சென்னை 20--4--56 வெள்ளி

## 'பனாரஸ்' பாடம்!

கோபுரம் போல செல்வம் குவிக்கப்பட்டிருக்கிறது. கோமேதகமும், மரகதமும் மூலைக்கு மூலை இறைந்து கிடக்கின்றன.

—அந்தக் கஜானாவுக்குள்ளே கன்னக்கோல் வைத்துப் புகுந்து விட்டான், கள்வனொருவன்!

காவலாளிக்கோ ஐயம்; கத்தியும் கம்புமாய் உள்ளே நுழைந்து. திருடனிருக்கும் பக்கம் விளக்கையும் தூக்கிப் பிடிக்கிறான்.

வெளிச்சத்தைக் கண்டு மேனி வியர்க்கப்பெற்ற கள்வன், அங்கமெல்லாம் பதற, "அண்ணேன்! நான் திருடியதில் முக்கால் பங்கைத் தந்து விடுகிறேன்; என்னை வெளியே போக அனுமதித்து விடு!"—என்று கெஞ்சினானாம்.

இப்படியாக வாதியையும், சாட்சிக்காரனையும் குற்றவாளியாக்கி விடுவது நீதியின் பார்வையிலிருந்து தப்பிவிடும் செயல்மட்டுமல்ல; இன்றைய அரசியல் போக்கின்படி பச்சைத் தமிழனார் கைக்கோள்ளும் தலை சிறந்த ராஜதந்திர முறையுமாகும்!

—அந்தக் கொள்கையின் படிதான் காமராசரும், அவரது நிழல் போல இருந்து கொண்டே அவருக்கே நீசத்தனம் புரிந்துவரும் சுப்ரமணியனாரும் தங்கள் திட்டங்களை வகுத்துக் கொண்டுள்ளார்கள்.

'என்ன சாதித்து விட்டது உங்கள் ஆட்சி?'—என்று கேட்டால், இன்னின்னது செய்தோம்; இவையிவை எம்மால் செய்து முடிக்கப்பட்டவை—என்று பட்டியலை நீட்டும் திராணியில்லாமல், 'இப்படிக் கேட்பதெல்லாம் தேர்தல் தந்திரம்; எலக்ஷனில் நிற்பதற்கான போலிப் பிரச்சாரம்'—என்கிற ரீதியிலே கேள்விக் குறிகளைத் திருப்பிப் போட்டு, வினாவெழுப்பியவர்களையும் குற்றவாளிக் கூண்டிற்குள் வளைத்துவிடப் பார்க்கிறார்கள், வளைந்து போன செங்கோலை நிமிர்த்திடும் நெஞ்சுரம் இல்லாதார்!

தேர்தலுக்கு நிற்பதாயிருந்தால் என்ன; அவர்களுக்குக் கேள்வி கேட்கும் உரிமையில்லையா? அன்றி; அரசாங்கத்தைக் கண்டித்து, எழுத்தால், பேச்சால் கசையடி தந்திடும் கடமையுணர்ச்சிதான் அவர்கட்கு இல்லாமற் போய்விட்டதா?

—காமராசரது குழுவினர் நம்மீது நாலா பக்கங்களிலிருந்தும் தொடுத்துக்கொண்டிருக்கும் கணைகளைக் கூர்ந்து கவனிக்குங்கால், திராவிட முன்னேற்றக் கழகம் தேர்தலுக்கு நிற்பது தகாச் செயல்—என்கிற உருவகத்தை நாட்டு மக்களிடையே சிருஷ்டிக்கத் தோன்றுவது போலத்தான் தெரிகிறது. அதுமட்டுமல்ல; வாதியின் மீதே குற்றச் சாட்டைத் தூக்கியெறிவதில் சிறிதளவு 'சாணக்கியம்' இருப்பது நமக்குப் புலப்பட்டாலும் கூட அது உண்மையின் முன்னே நாளடைவில் உருத்தெரியாமல் ஆகிவிடும் தன்மை கொண்டது என்பதையும் நம்மால் சுட்டிக்காட்டாமலிருக்க முடியவில்லை

—அத்தகைய ஆணவப் போக்கினருக்கு தரும் அதிர்வேட்டுதான் சென்ற ஏப்ரல் 17-ம் தேதியன்று வெளி வந்திருக்கும் செய்தியாகும்!

**இது நாள்வரை காசிக்கு பனாரஸ் என்று வழங்கி வரும் பெயரை "வாரணாசி" என்று மாற்றியமைக்க உத்தர பிரதேச சர்க்கார் தீர்மானித்திருக்கிறதாம். புத்தருடைய 2500-வது ஜயந்தி தினமாகிய மே மாதம் 21-ம் தேதி இது அமுலுக்கு வருமாம்.**

—காசி என்ற பெயர் காசினி அறிந்த பெயர்! பல்லும் சொல்லும் போன கிழங்கள் முதல், நெஞ்சைபள்ளும் மழலை வழங்கும் சிறார் வரை; அனைவருக்கும் அறிமுகமான பெயர்—காசி!

புராண போதகர் என்ன; புத்துலகச் சிற்பிகளென்ன—எல்லோருமே தெரிந்து வைத்திருக்கிறார்கள் காசிப் பட்டணத்து வரலாற்றை!

—இருந்தும் அதன் பெயரை மாற்றப் போகிறார்கள், வாரணாசி என்று!

காசி என்ற பெயர் உலகம் உள்ளளவும் வழங்கும் என்ற நினைப்பில்,

வடக்கே ஒரு காசி; தெற்கே ஒரு தென்காசி—என்று அந்தப் பெயரைச் சார்ந்தே பல பட்டணங்களும் உருவாகியிருக்கின்றன!

—இந்த நிலையிலேதான் காசி வாரணாசியாக வடிவமேக்கப் போகிறது. ஏன், அப்படி? பத்திரிக்கைச் செய்தியைப் படியுங்கள்:

**"வாரணாசி என்ற பெயர் காசி என்பதையும்விட புனிதமான பெயரென்று கூறப்படுகிறது. ராமாயணம், மகாபாரதம் முதலியவற்றில் இந்தப் பெயர் தான் காணப்படுகிறது."**

—எனவேதான் புராதனச் சிறப்பும், பெருமையும் பெற்றிருப்பதாகக் கருதப்படும் வாரணாசி காசியின் இடத்தைப் பிடித்துக் கொள்ளப்போகிறது.

பாரதத்திலும், இராமாயணத்திலும் இன்னும் எவ்வளவோ இருக்கின்றன—அமுலாக்க முடியாத பெயர்கள்; சம்பவங்கள்! அந்தப் பெயர்களைச் சூட்டினால் உலகம் பரிகசிக்கும்; அந்தச் சம்பவங்களை நடத்தினால் சம்பந்தப் பட்டவர்கள் சட்டமன்றத்திலேற வேண்டிய நிலைமை ஏற்படும்! இருபதாம் நூற்றாண்டுக்கும், பகுத்தறிவு நோக்கிற்கும் அவை ஒத்து வராவிட்டாலும்கூட, பழமை மோகம் அவர்களை பெயர் மாற்றத்திற்குத் தூண்டியிருக்கிறது!

காசி உலகப் பிரபல்யம் பெற்ற பெயர் என்பதாக எந்த பக்தவத்சலங்களும் உத்தர பிரதேச சட்டசபையிலே கூச்சல் எழுப்பவில்லை!

'பெயர் மாற்றத்துக்கு அவசியமே எழவில்லை'—என்று எந்தக் காமராசரும் அங்கே ஆலாபனை பாடவில்லை!

பகுத்தறிவு பரிகாசம் செய்யுமே என்பது பற்றிக் கூட கவலைப் படாமல் 'பனாரஸ்' என்னும் பெயரை அழித்தெடுத்து விட்டார்கள்!

'வாரணாசி' மகாபாரதத்திலும், ராமாயணத்திலும் காணப்படுகிறதாம்.

'தமிழ் நாடு'—என்ற பெயர் மட்டும் என்ன இடைச் செருகலா? அல்லவே!

'சிலம்பு' பேசுகிறதே, 'தமிழ் நாடு' 'தமிழ் நாடு' என்று!

**"வையக வரைப்பில் தமிழகம்"**

—என்று புறநானூற்றுப் பாடல் செப்புகிறதே!

**"இமிழ் கடல்வேலித் தமிழகம்"** — என்ற பதிற்றுப் பத்தைப படித்துக் கூட, தமிழ்ப் பண்பு கெட்டவர்களுக்குப் பித்தம் தெளியவில்லையே!

**"சப்புத் தீவினுட் தமிழகமருங்கிற்..."**

—என்று மணிமேகலையில் குருடனுக்கும் புலப்படும் வகையில் தெளிவாகச் சொல்லப்பட்டிருந்தும், எலியாக முயலாகத்தான் வாழ்வேன்; புழுவாகத்தான் நெளிவேன்—என்று இழிநிலையை உயர் நிலையாகக் கொள்ளும் ஒதிய மரங்கள் அதை ஏற்க மறுக்கின்றனவே!

தாயின் பெயரை ஏற்க மறுக்கும் எத்தர்களின் வருங்காலத்தைக் கையிலே வைத்திருக்கும் பெருமக்களே! உத்தர பிரதேசம் காட்டும் உவமையைப் பாருங்கள். இங்கேயுள்ள ஊமை அமைச்சரது உதாரணத்தையும் உற்றுநோக்குங்கள். மறந்து விடாதீர்கள்:

தமிழினத் துரோகிகள் நாளை வெளியில் தலை காட்டக் கூடாது!

### கவலையை மறக்க!

வாழ்க்கையில் கசப்பேற்படாமலிருக்க இரு வழிகள்தான் இருக்கின்றன. ஒன்று கிடைத்திருக்கிற நிலைமையை எண்ணிக் களிப்படைவது: இரண்டாவது இதைவிட மோசமான நிலை ஏற்படாமலிருந்ததே என்று கருதி கவலையை மறப்பது!

உதாரணமாக நெருப்புக் குச்சியைக் கொளுத்தி. மறதியாக சட்டைப் பைக்குள் போட்டு விட்டோமானால், சட்டை பாழாயிற்றே என்று கவலைப்படக் கூடாது; 'நல்லவேளை சட்டைப் பையில் வெடி மருந்து இல்லாமற் போனதே' என்று நினைத்து மகிழ்ச்சியடைய வேண்டும்!

சந்தோஷமாக இருக்கலாமென்று திட்டம் போட்டுக் கொண்டிருந்த ஓய்வுக் காலத்தில், தொல்லை கொடுக்கும் விருந்தாளிகள் வந்து விட்டால், 'நல்லவேளை 'சம்மனோடு' போலீஸ்காரன் வரவில்லையே?, என்று எண்ணி இன்பமடைய வேண்டும்!

உம்முடைய மனைவி உமக்குத் துரோகம் நினைத்தால் அப்போதுகூட நீர் மகிழ்ச்சியடைவதற்கான சந்தர்ப்பம் உண்டு என்ன தெரியுமா? 'நல்லவேளை: எனக்குத்தானே துரோகம் செய்தாள், இந்த நாட்டுக்குத் துரோகம் செய்ய வில்லையே?' என்று கருதிக் கொள்ள வேண்டும்!

—ஆன்டன் செக்காவ்.

One side page dark

# பணிபுரிவோம் வாரீர்?

"அழகிரிசாமியின் பெயருக்கு நூறு ரூபாய் மணியார்டர் செய்து விட்டு அந்த ரசிதை எனக்கு அனுப்பி வைத்தால் நான் கூட்டத்துக்கு வர தேதி தருகிறேன்."

இப்படி ஒரு நிபந்தனை விதித்தார் அண்ணா. நாமெல்லாம் ஒரே குடும்பமாக இருந்த போது கொடிய நோயின் கோரக் கரங்களுக் கிடையே சிக்கி அழகிரி இன்னல் அனுபவித்தபோது!

சுயமரியாதை இயக்கத்தின் சுடராய் — கொள்கை முழக்கும் முரசமாய் — பெரியாரின் வலக்கரமாய் — தென்னகமெங்கும் தீப்போலச் சுழன்று நல்லன அல்லாதவை தீய்த்து இயக்கத்திற்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்ட அழகிரி தான் உடல் இளைத்து உள்ளம் சோர்ந்தும்—ஒ ளி யு மி ழ் கண்களிலே உறுதியைக் காட்டிக் கொண்டு மரணப் படுக்கையிலே புரண்டு கொண்டிருந்தார்.

தா ம் ப ர ம் வைத்தியசாலை அவரைக் கை விட்டது. தாம தத்தைக் காரணமாகக் காட்டி! தலைவரோ அவர் பக்கம் கண் திருப்பவும் மறுத்தார். இத்தனைக்கும் அழகிரி பெரியாருக்கு பக்தர்-ஏன்; பெரியார்ப் பித்தர் எனினும் பொருந்தும்! அத்தகைய படைத் தளபதி—நம்பிக்கையில்லை யென்று கைவிடப்பட்ட நாட்டிற்கு நாடி முறுக்கேற்றி — சாவுப் படுகுழிக்குச் சென்று கொண்டிருந்த சமுதாயத்திற்குப் புத்துயிர் வழங்கி நாவைப் பறையாகக் கொண்டு காடுமேடு சுற்றி கர்ஜனை புரிந்து-கடமை செய்து கழகம் வளர்த்த வீரன் சிந்தனைப் பட்டாளத்தின்சேனதிபதி. தமிழரின் தங்கம்.—தாம்பரத்திலே மருத்துவர்களால் கை விடப் பட்டு ஊர் திரும்ப வேண்டிய நிலைமைக்கு ஆ ளா கி நின்றிடுகின்றார் — இல்லை; அவர் செயலற்றுப் படுத்திருக்கின்றார். அவரை நம்பி யிருந்த குடும்பம் அவரைச் சுற்றி நின்று கொண்டிருக்கிறது.

அந்த நேரத்திலேதான் நமது அண்ணா பெரியாரிடம் வாதாடிக் கொண்டிருக்கிறார்; அழகிரிக்கு இச்சமயம் ஏதாவது பெருந்தொகை நிதியளிக்க வேண்டுமென்று! பதில்தான் உங்களுக்குத் தெரிந்ததாயிற்றே அண்ணாவின் இருதயத்திலே வேல் செருகி விட்டு படித் தணித்துக் கொண்டாரோ.........

"தம்பீ மதியழகா! அண்ணாத்துரையிடம் சொல்! நண்பன் யார்? துரோகி யார்? என்பதை அழகிரி உணர்ந்துகொண்டான் என்று சொல்!" என உரக்கக் கத்தினாராம் அழகிரி. உணர்ச்சி வசப்பட்ட சொற்களன்றோ! ஏற்கனவே கோடையிடி அழகிரிசாமி என்பர் அவரை! அவரைச் சூழ்ந்து நின்றோர் கண்களிலே மழை! அவரோ இடி முழக்கமிடுகிறார் — அந்த சிங்கத்தைச் சுமந்தவாறு ரயில் நகர்ந்தது. தஞ்சையிலே அழகிரிக்கு தனித்ததோர் வீட்டிலே மீண்டும் சிகிச்சைகள் தொடர்ந்தன.

பெரியாரின் கார் தாம்பரம் வழியாக திருச்சி நோக்கிப்பறந்தது. ஆமாம்; அழகிரி ஆதரவற்று நிற்கும் அந்தத் தாம்பரம் வழியாகத்தான் உடனே அண்ணா திருவொற்றியூர் சண்முகம் வீட்டிற்கு ஓடினார். சுயமரியாதைக் கழகத்திற்கென நாடக வாயிலாகத் திரட்டப் பட்ட பணம் ஏறத்தாழ ஐநூறு ரூபாய் இருந்தது. அதைப் பெற்றுக் கொண்டு மதியழகன் தாம்பரம் ஓடி வந்தார். அதற்குள் அழகிரியை புகை வண்டியில் கொண்டு வந்து படுக்கவைத்து விட்டார்கள், மதியழகன், அண்ணா தந்த பணத்தை அழகிரியிடம் கொண்டு போய்க் கொடுத்தார். அதை அழகிரி வாங்கிக் கொண்ட காட்சியை அப் பப் பா.............அதைச் சொல்லும்போது இப்போது கூட மதியழகன் அழுது விடுவார் நாமும் அழுது விடுவோம். நோட்டுக்களைக் கசக்கியவாறு தன் தலையணைக்குக் கீழே போட்டுக் கொண்டாராம். அய்யோ—யார் மீது இருந்த ஆத்திரத்தை அவர் அப்

அப்போதுதான் அண்ணா அவர்கள், தன்னைக் கூட்டத்திற்கு அழைக்கும் தோழர்கள் அழகிரிக்கு நூறு ரூபாய் நன்கொடை அனுப்ப வேண்டும் என்ற நிபந்தனையை விதித்தார்கள். அந்த நிபந்தனைப்படி வந்த தொகை ஆயிரத்துக்கு மேலிருக்கும். அழகிரியின் மூச்சு அடங்கிய அன்று நான் தஞ்சையில் இருக்கிறேன். அப்போது கூட நூறு ரூபாய் மணியார்டர் வந்தது. கையெழுத்து போட்டு வாங்கத்தான் அழகிரிஇல்லையே அதனால் அது திரும்பிப் போயிற்று.

அழகிரி தனது குடும்பத்தினரையும்—குடும்பத்தினும் மேலாக நேசித்த நாட்டு மக்களையும் விட்டுப் பிரிந்தார். அவரது கல்லறை தஞ்சையிலே விண்ணோக்கி எழுந்து நிற்கிறது. அழகிரியின் நெடிய உருவத்தை —அவரது நிமிர்ந்த நோக்கை எடுத்துக் காட்டுவது போல் அமைந்திருக்கிறது அந்தக் கல்லறை.

கல்லறையில் வீற்றிருக்கும் அந்த வீரனைப்பற்றி தஞ்சையில் நடைபெற்ற மாணவர் மாநாட்டில் நானும் மதியழகனும் பேராசிரியர் அன்பழகன் தலைமையில் பேசினோம். அந்தப் பேச்சு பெரியாரைத் தாக்கிடும் விதத்தில் அமைந்தது எனக் கருதப்பட்டு எங்கள் மூவர் மீதும் விடுதலை இதழ் பாணம் தொடுத்தது. அதுபெரிய கதை. அந்தக் கதையின் தொடர்ச்சியாகவே தி. மு. கழகம் பிறந்தது.

சாவதற்குள் ஒரு முறை தலைவனை சந்திக்கும் பாக்கியம் கிடைக்காதா - என எண்ணி யெண்ணி உயிர்விட்ட தளகர்த்தனையும்—அவர் சுருண்டு படுத்திருக்கும் வீட்டோரத்து வீதி வழியாகத் தலைவரின் கார் பல முறை சென்றும்—ஒரு முறை கூட உயிருக்குப் போராடிக் கொண்டிருப்பவரைக் காணுவோம் என்ற இரக்கம் தலைவரின் நெஞ்சில் எழாத நிலையையும் கண்ட யாருக்குத்தான் இருதயம் எரிமலையாக மாறாது!

எரிமலையைத் தொடர்ந்து பூகம்பம்—கடற்கோள் — என்னும் விதத்திலே கழகத்திலே பிளவு-பிரிவினை—திருமணம்—நம்பிக்கையில்லை என்ற அறிக்கை! தி. மு. கழகம் உதயம்!

அழகிரியின் குடும்பத்திற்கு கலைவாணரைக் கொண்டு நடத்திய கலை நிகழ்ச்சியிலே பெருந்தொகை மிச்சம். குடும்பத்தாரின் நிலம் மீட்டுக் கொடுக்கப் பட்டது

நாட்டுக்குப் பணியாற்றி தியாகத் தீயிலே குதித்து உயிர் விட்ட தோழர்களையும்-அந்தத் தோழர்களை நம்பி உயிர் வாழ்ந்த குடும்பத்தினரையும் தி. மு. கழகம் மறந்ததில்லை. தன் சக்திக்கு மீறிய அளவிலே தனது பங்கைச் செலுத்தியிருக்கிறது.

முதல் இந்தி எதிர்ப்புப் போரிலே உயிர்விட்ட தாளமுத்துவின் துணைவியாருக்கு மாயவரம் தி.மு. கழக மாநாட்டு மூலம் கணிசமான தொகையொன்று நிதியாகத் தரப் பட்டது.

உடையார் பாளையம் வேலாயுதம்-நாமெல்லாம் திராவிடக் கழகத்தில் இருந்த போது—

தொடர்ச்சி 10-ம் பக்கம் பார்க்க

## மாநில மாநாடு
## பிரதிநிதிகள் தேர்வு

மே 17, 18, 19, 20-ந் தேதிகளில் திருச்சியில் நடைபெறவிருக்கும் தி. மு. கழக 2-வது மாநில மாநாட்டிற்கு பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பது குறித்துக் கீழ்க்கண்ட விளக்கம் தரப்படுகிறது:—

ஒவ்வொரு கிளைக் கழகங்களிலிருந்தும், செயலாளர், மற்றுமொரு உறுப்பினர் ஆக இருவர் பிரதிநிதிகளாக தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

மாவட்டக் குழுக்களைப் பொறுத்தவரையில், அதன் எல்லா உறுப்பினர்களுமே பிரதிநிதிகளாகக் கலந்துகொள்ளும் உரிமை பெற்றவர்களாவர்.

பொதுக் குழு உறுப்பினர்கள் அனைவரும் வரவேற்புக் குழு உறுப்பினர்களாகவும், பிரதிநிதிகளாகவும் கலந்து கொள்ளும் உரிமை பெற்றுள்ளனர்.

எனவே, இவ் விளக்கத்திற்கேற்ப எல்லாக் கிளைகளும் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து, அதன் விவரத்தையும், பிரதிநிதி ஒவ்வொருவருக்கும் ஐந்து ரூபாய் வீதம் கட்டணமும் கிளைக் கழகச் செயலாளர் கையொப்பமுடன், ஏப்ரல் மாதம் இறுதிக்குள், 'தோழர் அம்பில் தர்மலிங்கம், வரவேற்புக் குழுத் தலைவர், தி. மு. க. மாநில மாநாடு, 9, கிலேதார் தெரு, தெப்பக்குளம், திருச்சி' என்ற முகவரிக்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

'அறிவகம்' சென்னை-13.
11—4—56

இரா. நெடுஞ்செழியன்,
பொதுச்செயலாளர், தி. மு. கழகம்.



# கள்ளிக்காடு!

ஏ. கே. வில்வம்

சொப்பன உலகத்துப் பனி மூட்டங்களில் மிதந்து கொண்டிருந்தேன். என் உடலின் ஒவ்வொரு அணுவிலும் இன்ப ஊசி பாய்ச்சப் படுவதுபோல இருந்தது. இதயத்திலே ஒரு அவஸ்தை — இன்னதென்று விளக்க முடியாத மயக்கம்! உறக்கத்திற்கும் — வி ழி ப் பி ற் கு மிடையே ஏற்படுமே ஒரு கனவுலகம், அதிலே சஞ்சரித்துக் கொண்டிருந்தேன். ஜன்னல் கதவுகள் திறந்து கிடந்தன. அதன் வழியாக படுக்கையில் இருந்தபடியே வெளிப்புறத்தில் பார்வையை செலுத்தினேன், உலகமே இருண்டு கிடந்தது! பிசு பிசு வென்று தூறிக் கொண்டிருந்த — மழையும் அந்த மழைத்துளிகளூடே புகுந்து குளிர்மொண்டு வரும் ஜிலுஜிலுப்பான காற்றும், மனோரஞ்சித மலரை முகரும் போது ஏற்படுமே ஒரு கிறுகிறுப்பு அதைப்போல இருந்தது. என் உடலில் ஏதோ ஒரு கனம்; இதற்குமுன் நான் அனுபவித்தறியாதது, என்னை செயலற்றவனாக்கி விட்டது. என் இதழ்களை மெல்லிய மலர்க்கரங்கள் தடவின. அடுத்த வினாடி பழச்சுளை ஒன்று திணிக்கப் படுவதுபோல உணர்ந்தேன், அதிலிருந்து கசிந்த தேன், தேனா அது? என்னை உணர்ச்சிப் பிண்டமாக்கி விட்ட மது! வெறுக்கவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் திணறினேன், உணர்ச்சிப் பெருக்கெடுத்தது. உமிழ் நீரைக் கூட்டி விழுங்கினேன், ஏதோ ஒரு நெடி! யாரோ கட்டித்தழுவுவதுபோன்ற ஒரு கதகதப்பான சூடு! இரண்டு பூக்கரங்கள் என் கன்னங்களை வருடின. மீண்டும் ஒரு பழச் சுளை! எழுத்து வடிவம் தரமுடியாத ஒரு முனகல்! வானத்திலே இருந்து ஒளி நீரோடை விழுவது போல பாய்ந்த மின்னல் கீற்று; அந்த அறைக்குள் வெளிச்சம் போட்டுக் காட்டியது. என் நிலையை அப்போதுதான் தெளிவாகப் புரிந்து கொள்ள முடிந்தது. உடலை வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தேன். வேகமாகச் சென்று மின்சார விளக்கின் பொத்தானை அழுத்தினேன்; 'மின்னல்' தாக்குதலால்; என்னைப் போலவே செயலற்று கிடந்தது அந்த மின்சார விளக்கு! மேஜையிலிருந்த மெழுகுவத்தியை ஏற்றி கையிலே எடுத்துக் கொண்டு, கட்டிலுக்கருகே வந்தேன். என் கண்களை என்னால் நம்பவே முடியவில்லை. பருவ இளைஞர்களை இரவு நேரங்களில் 'மோகினிப் பிசாசு' மிரட்டுமென்பார்களே தலை நரைத்துப் போனவர்கள்! அதைப் போல, மோகினிப் பிசாசுதான் என் முன் நிற்கிறதோ என்ற சந்தேகம் வந்து விட்டது. மெழுகுவத்தியை மேஜை மேல் வைத்தேன்; என் கண்களைக் கசக்கிக் கொண்டு உற்றுப் பார்த்தேன். நீர் கசிந்த கண்கள்! பளபளவென்று அந்த மங்கிய ஒளியிலே பிரகாசித்துக் கொண்டிருந்தன. அவள் முகமெல்லாம் வியர்வை அரும்பியிருந்தது; அவள் கண்களிலே ஒரு மிரட்சி! செய்யக் கூடாத தவறு செய்து விட்டவளைப் போல, அவள் உடலெல்லாம் நடுங்கிக் கொண்டிருந்தது.

"யார்... நீங்களா...!" நான் சொல்லி முடிக்கவில்லை. அதற்கு மேல் என்னைப் பேச முடியாமல் தன் கரங்களால் என் வாயைப் பொத்தி—பேச வேண்டாம் என்று சைகை செய்தாள்.

பெண்மையோடு 'வெறி' கலக்கும் போது, இப்படித்தான் பயங்கரத் தோற்றம் கொள்ளுமோ? அப்பப்பா; நாணத்தை கொன்று விட்டு சிரிக்கும் உணர்ச்சி நரம்புகள்! 'பசி'யால் துடித்துக் கொண்டிருந்தன. அவள் கச்சை தளர்ந்து இருந்தது. மேலாடை அவள் கை வளைவிலே புரண்டு கிடந்தது. தாபத்தோடு பெருமூச்சு விட்டாள்— மீண்டும் என்னைத் தழுவினாள். என் நெஞ்சத்திலே 'சிப்பாய் கலகம்' நடந்து கொண்டிருந்தது. அந்த 'விபத்திலிருந்து' என்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியாதவனாகி விட்டேன்! அந்தப் போர்க் களத்திலே, போதைத் தழும்புகள்; மோகச் சேட்டைகள்; பருவ விளையாட்டுகள்; எல்லாவற்றிலும் அவளே வெற்றி பெற்றாள். இவ்வளவு ஏன்? அந்த மோன நாடகத்தில் நான் ஒரு ஊமைக் கதாநாயகன்!

★

தாழையூர் உயர்நிலைப்பள்ளியின் தமிழ்ப் பண்டிதர், அம்பலவாணருக்கு எப்பொழுதுமே ஒரு தனி மதிப்பு! தலைமையாசிரியர் சமரசத்திலிருந்து—பியூன், பொன்னம்பலம் வரை, 'தமிழ் ஐயா' என்றுதான் அவரை அன்போடு அழைப்பார்கள்; அவர் புதிதாக எங்களூருக்கு மாற்றலாகி வந்தபோது வீடு கிடைக்காமல் தவித்துக் கொண்டிருந்தார். என் தந்தைக்கோ தமிழ்ப் பண்டிதர்கள் என்றாலே ஏனோ வெறுப்பு ஏற்பட்டுவிடும்; காரணம் பல தமிழ்ப் பண்டிதர்களுக்குக் 'கடன்' கொடுத்ததால் ஏற்பட்ட அனுபவமாக இருக்கலாம்! ஒரு தமிழ்ப் பண்டிதரை வீட்டில் குடி வைப்பதைவிட, ஒரு டஜன் 'பிள்ளைப் பூச்சி'களை மடியிலே கட்டிக் கொண்டிருக்கலாம் என்று கூறுகிற அளவிற்கு தமிழ்ப் புலவர்களிடம் அவருக்கு கசப்பான ஒரு எண்ணம் வளர்ந்து இருந்தது. இந்த நிலையில் அம்பலவாணரை எங்கள் வீட்டின் ஒரு பகுதியிலே குடியிருக்க செய்வது எப்படி? என் தந்தையிடம் நான் தொடர்ந்து பல நாட்கள் வற்புறுத்தி வந்ததால் எப்படியோ சம்மதம் தந்தார். அம்பலவாணர் எங்கள் வீட்டிலேயே குடி வந்துவிட்டார். அதன் காரணமாக நான் அவருக்கு வேண்டிய மாணவனாகி விட்டேன் என்பதில் ஆச்சரியமென்ன இருக்கிறது.

யார் சொல்லி தெரிந்து கொண்டாரோ என்னவோ, நெருக்கடியான நேரங்களில் கூட, என் தந்தையிடம் 'கடன்' கேட்கும் 'பாவத்'தை மட்டும் அடியோடு மறந்துவிட்டார் அம்பலவாணர்!

இப்போதெல்லாம் தமிழுக்கும்—தமிழாசிரியர்களுக்கும்—இந்த சீர் திருத்தக்காரர்களால் ஒரு புதிய 'மார்கெட்' உண்டாகி விட்டதல்லவா? ஒரு காலத்தில் 'பியூன்'கள் கூட சட்டை செய்யாமல் 'பூமிக்கு பாரம்' என்று பிறரால் கருதப் பட்ட நிலைமாறி, இன்று தலை கீழ் மாற்றம் ஒன்று ஏற்பட்டிருக்கிறதல்லவா? அதற்கு எடுத்துக் காட்டாக, அம்பலவாணர் பள்ளிக்கு புறப்படும் போது அவருக்குப்பின்னால் நாலைந்து மாணவர்கள் செல்வார்கள். ஒருவன், 'காம்போசிஷன்' நோட்டுகளை சுமந்து செல்வான்! மற்றொருவன் வெந்நீர் கூஜாவை தூக்கிக்கொண்டு போவான்! இன்னொருவன் 'தர்மாக்ஸ் பிளாஸ்கில்' காப்பிக் கஷாயத்தை ஏந்தி நடப்பான்!

ஊருக்கு வந்த சில நாட்களிலேயே, மற்ற ஆசிரியர்களுக்கு இல்லாத ஒரு செல்வாக்கைத் தேடிக் கொண்டார் அம்பலவாணர். எவ்வளவுதான் உறவு கொண்டவராய் இருந்தாலும்—இந்த 'எடுபிடி' வேலைகளில் மட்டும் எனக்கு விதி விலக்கு உண்டு! என் மேல் கொண்ட அன்போ! அன்றி என் தந்தை முன்கோபக்காரர் என்பதை அறிந்திருந்ததால் கிடைத்த 'சலுகை'யோ எனக்குத் தெரியாது!

அந்த ஆண்டு எனக்கு பள்ளி இறுதி ஆண்டு! 'கஜனி முகமது', பதினெட்டு முறை படையெடுத்தானும், அவனுக்கு நான் எவ்வளவோ மேல்! காரணம் அது என் மூன்றாவது படையெடுப்பு! முதல் ஆண்டிலேயே தேறிய எத்தனையோ மாணவர்களுக்கு 'வல்லின, மெல்லின' சந்தேகம் தீராத நிலையில், நான் தமிழய்யாவை 'மடக்கு'கிற அளவிற்கு 'புலமை' பெற்றிருந்தேன் என்றால் நான் ஏன் வெட்கப்பட வேண்டும்? பரீட்சையும் வந்தது. உருப்போட்டதை பரிட்சைத் தாளில் கொட்டி வைக்காமல் ஏதோ சொந்தமாக எழுதி 'அவாள்' வட்டாரத்துக்கே உரித்தான அந்த 'முதல்' வரிசையை எட்டிப் பிடித்து விட்டேன் என்று பெருமை யடைவது எப்படித் தவறும்?

பள்ளி இறுதி வகுப்புத்தானே மாணவர்களுக்கு வசந்த காலம்! பள்ளியிலே வந்து படிக்கும் சிறுசுகள், பொடிசுகள், பெருசுகள், என்ற வேறு பாட்டையே மறந்து விட்டு, 'கண் விடு தூது 'கடிதம்விடு தூது.' என்றபெயரால் 'காதல் சாம்ராஜ்யத்தை' கற்பனை செய்து கொள்ளும் 'எல்—போர்டு' எடுபடாத பருவம்! இதற்கிடையிலே காதல் பாதையில் குறுக்கிடும் 'வில்லர்'களோடு வேறு போராட்டம்! இப்படிப்பட்ட 'ரசமான' சம்பவங்கள் நிறைந்த பள்ளி வாழ்வைத் துறந்து விட்டு வீட்டிலேயே முடங்கிக் கிடப்பதென்றால்— வேதனையாகத்தானே இருக்கும்? என் சரித்திரத்தின் இந்த 'வரண்ட காலத்தை'க் கழிக்க சில நல்ல தமிழ் ஏடுகள் துணை புரிந்தன, உற்ற தோழர்களாகவும் பயன்பட்டன!

என்றாலும் முறைப்படி பயில வேண்டும் என்று எண்ணினேன். என் விருப்பத்தை அம்பலவாணரிடமும் தெரிவித்து விட்டேன்: அதற்குப் பிறகெல்லாம், மாலை அம்பலவாணர் பள்ளியிலிருந்து திரும்பியதும், ஒரு மணி நேரம் அல்லது அதற்கும் கொஞ்சம் அதிகமாக அவர் அறையில், நேரத்தை செலவழித்துக் கொண்டிருந்தேன். சில குறிப்பிட்ட தமிழ் நூல்களை அவரே, பொறுக்கி எடுத்து எனக்கு போதிக்க ஆரம்பித்தார். குறள், சிலப்பதிகாரம், புறநானூறு இப்படி சில ஏடுகள் அம்பலவாணரின்

★ தொடர்ச்சி 10-ம் பக்கம்

பேனா ஓவியம்!...
(பக்கம்-9)

# வெள்ளிக் கிழமை

1

"விடிந்தால் வெள்ளிக் கிழமை, எனக்கு மிக விசேஷமான நாள். என் வாழ்வில் எத்தனையோ வெள்ளிக்கிழமைகள் வந்து போய் விட்டன: இன்னும் வர இருக்கின்றன. ஆனாலும் இந்த வெள்ளிக்கிழமைக்கு மட்டும் இவ்வளவு பெரிய சிறப்பு எங்கிருந்து வந்தது! நினைக்க நினைக்க நெஞ்சு இனிக்கிறது. வியப்பு பெருகிடுகிறது. இளம் வயதிலே-பள்ளிப் பருவத்திலே என் அன்பைப் பெற்ற கிழமை ஞாயிற்றுக்கிழமை யொன்றுதான். இப்போதோ - ஆயிரம் ஞாயிற்றுக்கிழமைகள் வந்தாலும் நாளை வரப்போகிற ஒரு வெள்ளிக்கிழமைக்கு ஈடாகுமா-என்ற கேள்வி என் இருதயத்திலே கொடி போட்டுக் கொண்டு குதிரை மீது செல்லும் மாவீரனைப் போல கம்பீரமாக எழுகிறதே; அது எப்படி?

இன்று மாலையிலே தெருவிலே பிச்சை யெடுத்துக் கொண்டு போயிற்று ஒரு பரதேசிக்கும்பல். அதிலே ஒருவன். "குதிரை பிறந்தது வெள்ளிக்கிழமை ராஜா தேசிங்கு" என்று பாடிக் கொண்டே போனான், நான் ராஜா தேசிங்கு பெரிய எழுத்துப் புத்தகத்தில் அந்தப் பாட்டை எத்தனையோ முறை படித்துமிருக்கிறேன்; கேட்டுமிருக்கிறேன். அப்போதெல்லாம் இல்லாத உணர்ச்சி இன்று மட்டும் ஏற்படுவானேன். ராஜா தேசிங்கின் குதிரை. வெள்ளிக்கிழமை பிறந்தால் என்ன, சனிக்கிழமை பிறந்தால் என்ன; அல்லது பிறக்காமலே போனால்தான் என்ன— என்று அலட்சிய சிரிப்பு கொட்டிய என் உள்ளத்திலே இப்போதுமட்டும் அந்த கிராமீயப் பாட்டு ஆழப் பதிந்து ஏதேதோ இன்பக்கனவுகளை உற்பத்தி செய்வதின் மர்மந்தான் என்ன?

அடுத்த தெருவில் இருக்கும் என் தோழி **கிளியோ**— அவளது கிருஸ்தவ மதத்திற்கு ஆண்டிலே ஒரு வெள்ளிக் கிழமை மகாத்மியம் பொருந்திய வெள்ளிக் கிழமையென்றும்— அன்று ஏசுநாதருக்கு ஏற்ற நாளென்றும் கூறி சர்ச்சுக்குப் போவாள். அப்பொதெல்லாம் வெள்ளிக் கிழமைக்கு என் நெஞ்சத்தில் இவ்வளவு பெரிய முக்கியத்துவம் ஏற்பட்டதேயில்லை.

'வெள்ளிக் கிழமையும் அதுவுமா-வீடு வாசல் சுத்தம் செய்யாமல்-சாணமிட்டு மெழுகாமல் — கோலமிட்டு அழகூட்டாமல்— குடும்பப் பெண் இப்படி சோம்பேறித் தனமாக இருக்கலாமா?' என்று பல வீடுகளில் மாமியார்கள் போராட்டத்திற்கு துவஜாரோகணம் செய்வதை நான் கண்டிருக்கிறேன். வீட்டுக் குல தெய்வத்திற்கு வெள்ளிக்கிழமை மாலையிலே நல்ல விளக்கு ஏற்றி வைத்து படையல் போடுவதையும் பார்த்திருக்கிறேன்.

பெண்களுக்கு - மாங்கல்யம்— மஞ்சள்—குங்குமம் எவ்வளவு புனிதமானதோ, அவ்வளவு புனிதமானது வெள்ளிக் கிழமையுமென்று எங்கள் தெருவில் நடந்த விகடக் கச்சேரியொன்றில் பாகவதர் குறிப்பிட்டு தெருப் பெண்களின் ஏகோபித்த பாராட்டுதலைப் பெற்றதும் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. கிழமைகளின் பெயரை யாராவது அடுக்கிக் கொண்டு போகும்போது எனக்கு சிரிப்பு பொங்கிக் கொண்டுவரும்.

திங்கட்கிழமை—சோம வாரம்! சோமவார விரதத்திற்கு திவ்யமான நாளாம்! 'செவ்வாயோ வெறுவாயோ' என்பார்கள்! பொன் அகப்பட்டாலும் புதன் அகப்படாதாம்—அவ்வளவு அருமையானதாம் அந்தக் கிழமை. செவ்வாய்க் கிழமை இரவு தூங்க ஆரம்பித்து வியாழக் கிழமை காலையில் எழுந்திருக்கிறானே; அவனுக்குத்தான் புதன் அகப்படாது என்று நான் கிண்டல்கூட செய்வேன், இப்படியெல்லாம் கிழமைகளைப்பற்றி கிழங்கள் வர்ணிக்கும்போது அவைகளை கேலிக்குரியதாக ஆக்கிய என்னை இந்த வெள்ளிக் கிழமை-அதுவும் நாளைக் காலையில் வர இருக்கிற வெள்ளிக் கிழமை — இப்படிக் கவர்ந்து விடுவானேன்!

உலக உத்தமர் மகாத்மாகாந்தி கொல்லப்பட்ட நாள் கூட வெள்ளிக் கிழமைதான். உலக மக்களின் கண்ணீரால் குளிப்பாட்டப்பட்டு- பெருமூச்சுக்களால் அலைக்கழிக்கப்பட்டு — மறைந்து போன வெள்ளிக் கிழமை! அந்த வெள்ளிக் கிழமை, காந்தியின் சவத்தை ஏந்திய மடியாக மட்டுமின்றி, என்னைக் களிப்பிலாழ்த்தும் மஞ்சமாகவும் மாறிடும் சக்தி வாய்ந்தது என்பதை இப்போதுதான் உணருகிறேன். உணருகிறேனா...அல்லது ஏதாவது உளருகிறேனா? சே! சே! வாய் விட்டுப் பேசி விட்டோம் போலிருக்கிறதே-யார் காதிலாவது விழப் போகிறது! விழுந்தால் காலையில் ஊர் முழுதும் தம்பட்டமடித்து நம் தலையைக் குனிய வைத்து விட்டுத்தான் மறு வேலை பார்ப்பார்கள்!"

**சிந்தாமணி**, படுக்கையில் புரண்டு கொண்டே யிருந்தாள். சிந்தனை அலைகள் அவள் உள்ளத்திலே புரண்டு புரண்டு எழுந்தன.

தலையைத் தூக்கி சுற்று முற்றும் பார்த்துக் கொண்டாள், யாராவது விழித்துக் கொண்டிருக்கப் போகிறார்கள் என்ற அச்சம் அவளை அப்படிச்செய்யவைத்தது.

அருகிலிருந்த விளக்கைத் தூண்டி விட்டு சுவற்றில் தொங்கிக் கொண்டிருந்த கடிகாரத்தை நோக்கினாள். மணி ஐந்தரை! அதே சமயத்தில் அவள் வீட்டுத் தெருக் கோடியில் உள்ள கடிகார மண்டபத்திலே யிருந்து ஐந்து பெரிய ஒலிகளும், அரை மணியைக் காட்டும் சிறிய ஒலியும் எழுந்து பொழுது விரைவில் விடியப் போகிறது என்பதை அவளுக்கு அறிவித்தன. மணிக் கூண்டு கடிகாரக் கணக்குப்படி வழக்கமாகக் கூவிக் கொண்டிருக்கும் சேவலும் தனது 'கொக்கரக்கோ' கீதத்தை ஆரம்பித்து சூரியனுக்குத் திருப்பள்ளி எழுச்சி பாடிற்று! சிந்தாமணிக்கு அப்போதுதான்ஆச்சரியம் அளவு கடந்து போயிற்று; இரவு முழுதும் தூங்காமலிருந்திருக்கிறோமே என்று!

சேவலின் முழக்கத்தை அவள் எத்தனையோ நாள் கேட்டிருக்கிறாள். அத்தனை நாளும் அதைப் பற்றி அவள் சிந்தனை செய்தது இல்லைதான்! சேவல் என்பது ஆண்—பெட்டை என்பது பெண் இதை யெல்லாம் இப்பொழுது ஏன் அவள் நினைத்து தனக்குத் தானே புன்னகை புரிகிறாள்! சேவல் கூவுகிறது, தன் வாழ்க்கையிலும் சேவல் கூவும் கட்டம் வந்து விட்டதாக அவள் எண்ணுகிறாளா? அந்த இன்ப நினைவுகளால் தனக்குத் தானே வெட்கப்பட்டுக் கொள்கிறாளா? மணிக்கூண்டு கடிகாரம் — பெரிய கோயில் மணி, இவைகள் எல்லாம் விடியற்காலையில் எப்போதும் போல் தங்கள் கடமையைச் செய்து கொண்டுதானிருக்கின்றன. மணிக்கூண்டு யந்திரத்தில் பழுது ஏற்பட்டாலன்றி ஆலயத்து மணிகாரன் தூங்கி விட்டாலன்றி, அந்த வைகறையொலி நிற்பதே யில்லை. ஆனால் சிந்தாமணியின் இருதயத்திலே மட்டும் என்றுமில்லாத யாழ் ஒலி முழங்குகிறது! இந்த ஒலி வழக்கமாக ஒலிக்கும் கடிகார ஒலியோ—ஆலய மணியொலியோ அல்ல! அவைகளினும் மேம்பட்ட ஒலி!

வைகறையில் சங்கு ஊதும் தாதன் தெருவிலே போகிறான். அமைதிப் படுக்கையிலே சுருண்டு முடங்கிக் கிடந்த இரவு, அசதியை உதறி விட்டு சோம்பல் முறித்தபடி எழுந்து உட்காருகிறது போலும்—அந்த ஊமைச் சத்தந்தான் தாதனின் சங்கு மூலம் வெளிப்படுகிறதோ என்னவோ? தௌ! தௌ!! தௌ!!! இந்தச் சங்கு முழக்கம் சிந்தாமணியை எங்கேயோ ஒரு புதிய உலகத்திற்கு அழைப்பது போலவே அமைந்து விட்டது. "ஊதுகிற சங்கை ஊதி வைத்தால் விடிகிற பொழுது விடியட்டுமே!" என்று பழமொழி சொல்வார்கள்' சேவல் கூவுவதாலோ—தாதனின் சங்காலோ— ஆலய மணியாலோ — பொழுது விடிவதில்லை யென்பது அவளுக்குந் தெரியும். ஆனால், அன்று மட்டும் அவர்களால்தான் பொழுது விடியப் போகிறது என எண்ணி, பொழுது விடியக் காரணமாக இருக்கும் சேவலை— தாதனை—ஆலயத்து மணிகாரனை மணிக் கூண்டு கடிகாரத்தை— அவள் வாழ்த்திக் கொண்டே யிருந்தாள்.

அவர்கள் எல்லாம் சேர்ந்துதான் மலையடிவாரத்திலோ— கடலுக்கடியிலோ தூங்கிக்கொண்டிருக்கும் கதிரவனை எழுப்பி விடுகிறார்கள் என்று நினைத்தாள். கதிரவன் களைத்துத் தூங்கி விட்டால், வெள்ளிக் கிழமை வருவதற்கு நேரமாகிவிடும்என்று அவள் பயந்தாள். தாதன் போனதும்—'நல்ல காலம் பிறக்குது— நல்ல காலம் பிறக்குது!' என்ற பரம்பரைப் பல்லவியுடன் பவனி வரும் குடுகுடுப்பைக்காரனின் கூச்சல்! அது அவளுக்கு கூச்சலாகவா இருந்தது;

குடுகுடுப்பைக்காரர்கள் இரவு நேரங்களில் மயானத்தில் படுத்திருப்பார்களாம், அப்போது அவர்கள் கனவில் இஷ்ட தேவதைகள் தரிசனமாகி, அந்த ஊரில் யார் யார் வீட்டுக்கு நல்ல காலம் வரப்போகிறது, எங்கெங்கே 'அய்யோன்னு' ஒருத்தன் போகப் போகிறான் என்ற செய்திகளை யெல்லாம் பட்டியல் போட்டுத் தந்து விடுவார்களாம். அந்தப் பட்டியலை குடுகுடுப்பைக்காரன் பொழுது விடிவதற்குள் ஊரில் சொல்லிவிட வேண்டுமாம். அதற்காகவே விடியற்காலை ஒரு முறை வந்து இஷ்ட தேவதை சொன்னதாக ஏதேதோ சொல்லிவிட்டுப் போவான். பின்னர்—பொழுது விடிந்தபிறகு மறுபடியும் ஒரு முறைவந்து பழைய துணிக்காக இரவு பாடிய பல்லவியைக் கொஞ்சம் புதுப்பித்து மெருகேற்றிப் பாடுவான். இது அவ்வளவும் அவன் பிழைப்புக்காக ஏற்படுத்திக் கொண்ட பொய்யுரைகள் என்பதை சிந்தாமணி நன்கு அறிவாள். அவள் வீட்டிலே இதுவரை குடுகுடுப்பைக்காரனுக்கு ஒரு கிழிந்த பழைய துணியும் போட்டது கிடையாது. இப்போது மட்டும் அவனுக்கு ஒரு புதிய துணி உடனே கொடுக்க வேண்டும் போலிருந்தது அவளுக்கு! "நல்ல காலம் பிறக்குது!" என்று அவன் சொல்கிறானும் - அது அவளுக்காகவே சொல்கிறானும்! என்ன பைத்தியக்கார நினைவு!

"குடு குடு குடு!" அவன் கையிலேயுள்ள குடுகுடுப்பை— குழந்தைகளைப் பூரிக்க வைக்கும் கிலுகிலுப்பை போல புதிய சக்தி பெற்றதோடு — அவளையும் குழந்தைபோல ஆக்கி விட்டது' சிந்தாமணி; படுக்கையை விட்டு



எழுந்து பலகணி வழியே வீதியை நோக்கினாள். கிழக்கு வானம் வெளுக்கத் துவங்கி விட்டது. சிந்தாமணியின் எதிர்காலத்தைப் பற்றிய புதிய அறிவிப்பா அது? அதோ, உழவர்கள் மாடுகளை ஓட்டிக் கொண்டு கலப்பைகளைச் சுமந்தவாறு கழனி நோக்கிப் புறப்பட்டு விட்டார்கள்!

வயலுக்குச் சென்றதும் மாடுகளைக் கலப்பைகளில் பூட்டுவார்கள்! குடும்பத்தை கலப்பைக்கும் கணவன் மனைவியை அந்த மாடுகளுக்கும் ஒப்பிட்டுப் பேசுவார்களே; அப்போதெல்லாம் சிந்தாமணி வாய்விட்டுச் சிரித்து-கலப்பையிலே பூட்டுகிற மாடுகள் இரண்டும் காளைகளாயிற்றே, அப்படித்தான் குடும்பத்திலும் இரு ஆண்கள் வாழ்க்கை நடத்துகிறார்களா எனக்கேட்டுக் கேலி செய்வாள்! இப்போது அவள் கண் எதிரேதான் காளைகளும், கலப்பைகளும், கலப்பை சுமக்கும் உழவர்களும் தென்படுகிறார்கள். இப்போது அந்தப் பழைய கேலி—கிண்டல் எல்லாம் எங்கேயோ போய் ஒளிந்து கொண்டு விட்டன. இல்லறத்தை நடத்த இருவரின் அன்பும் ஒத்துழைப்பும் தேவை என்பதை வலியுறுத்தவே அந்த உதாரணம் பெரியவர்களால் கையாளப் பட்டது என்ற உண்மையை உலகிற்கு எடுத்துச் சொல்ல அவள் தயாராக நின்று கொண்டிருப்பது போலக் காணப்பட்டாள்.

இரவு-முல்லை மலர்கள் பூத்துக் குலுங்கிய வானச் சோலையில்— இப்போது தன்னந் தனியாக ஒரே ஒரு செம்பருத்திப் பூ மட்டும் காட்சியளித்தது! அதுவும் கிழக்கு திசையில்!

இரவுமுழுதும் எண்ணங்களால் சூழப்பட்டு-தூங்காமல் தொல்லைப்பட்டு - அந்தத் தொல்லையிலும் ஒரு சுகங் கண்டு—புதியதோர் பாதையிலே அடியெடுத்து வைக்கும் ஆனந்தத்தோடு புறப்பட்ட அவளுக்கு—கிழக்கிலே காணப்பட்ட இளங்கதிர், அபாயம் அறிவிக்கும் ஒரு சிவப்பு விளக்குப் போலவும் தென்பட்டது! திடுக்கிட்டாள். பின் சமாளித்துக் கொண்டாள்.

இன்னும் சிறிது நேரத்தில் தோழிகள் வந்துவிடுவார்கள் நீராட அழைப்பதற்கு! தினந்தோறும் தோழிகள் வந்து கொண்டுதானிருக்கிறார்கள். கிராமத்திலும் சேராமல்—நகரத்திலும் சேராமல் — நடுநிலைமை வகிக்கிற **வேதபுரத்துப்** பெரிய குளம் காலை ஏழு மணி வரையிலே அந்தப் பகுதியிலே யிருக்கிற பெண்களுக்குத்தான் சொந்தம். பருவப் பெண்கள் அதிகாலையிலேயே கூட்டைவிட்டுப் புறப்படும் புறாக்கள் போல வீட்டை விட்டுப் புறப்பட்டு ஆண்கள் நடமாட்டம் ஆரம்பமாவதற்குள் தங்கள் கடமைகளை முடித்துக் கொண்டு, வீட்டில் போய் அடைந்து விடுவார்கள். அப்படிக் கிளம்பும் புறாக் கூட்டத்தின் ஒரு பகுதியிலே சிந்தாமணி அங்கம் வகிக்கிறாள். அவளும் பருவக் கொடியன்றோ! அந்தக் கூட்டத்திலேயே காலையில் சிறிது தாமதமாகப் படுக்கையை விட்டு எழுவது சிந்தாமணிதான்!

தோழிகள் வந்து தொல்லை கொடுத்து எழுப்பி அவளை நீராட அழைத்துச் செல்வார்கள். அதிலே யொருத்தி திருப்பாவையை மனப்பாடம் பண்ணியவள்—அவள் பெயரும் ஆண்டாள்தான்! அவள் தினந்தோறும் ஒரு திருப்பாவை பாடி சிந்தாமணியை எழுப்புவாள்—

*"உங்கள் புழக்கடைத்*
*தோட்டத்து வாவியுள்*
*செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து*
*ஆம்பல்வாய் கூப்பினகாண்*
*செங்கல் பொடிக்கூறை வெண்பல்*
*தவத்தவர்*
*தங்கள் திருக்கோயில்*
*சங்கிடுவான் போதந்தார்*
*எங்களை முன்னம் எழுப்புவான்*
*வாய்பேசும்*
*நங்காய்! எழுந்திராய்!*
*நாணாதாய்!"*

எனப் பாடுவாள் இசையோடு! இன்னொருத்தி,

*"எல்லே! இளங்கிளியே*
*இன்னம் உறங்குதியோ?"*

என்று கூச்சல் போடுவாள். இப்படியெல்லாம் கொட்டமடிக்கும் தோழிகள் - இப்போது வரப்போகிறார்கள். அவர்களுக்கு நேராக அவள் விழித்துக்கொண்டு இருந்தால்—இத்தனை நாள் இல்லாமல் இன்று மட்டும் எப்படியடி அதிகாலையில் விழித்துக்கொண்டாய் என்று கேட்பார்கள் — அதற்கு பயந்துகொண்டு சிந்தாமணி தூங்குவதுபோலப் படுத்துக்கொண்டாள்.

வழக்கம் போல தோழிகள் வந்துவிட்டார்கள். சிந்தாமணி கண்களை இறுக மூடிக்கொண்டு அயர்ந்து தூங்குவது போல பாசாங்கு செய்து கொண்டிருந்தாள். ஆண்டாள் பாட ஆரம்பித்துவிட்டாள் திருப்பாவையை!

*"தூமணி மாடத்துச் சுற்றும்*
*விளக்கெரியத்*
*தூபம் கமழத் துயிலணைமேல்*
*கண்வளரும்*
*மாமன்மகளே! மணிக்கதவம்*
*தாள் திறவாய்!"*

என்றபடி சிந்தாமணியின் அழகிய கருவிழிகளை மூடி யிருக்கும் இமைக் கதவுகளைத் தன் விரல்களால் திறந்து விட்டாள் ஆண்டாள். நன்றாகத் தூங்கியவள் போல சிந்தாமணியும் கண்களைக் கசக்கிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள்.

"உம்! இப்போது...நாங்கள் உன்னைத் திருப்பாவை பாடி எழுப்புகிறோம், இன்னும் கொஞ்சநாள் போனால் அவரை எழுப்ப அவரது நண்பர்கள் திருப்பாவை பாடுவார்கள்!"

"யாரையடி! யாரை?"

என்றபடி சிந்தாமணி வெட்கித் தலை குனிந்து கொண்டாள்;

"அவரைத்தான், அதுவும் எப்படி எழுப்புவார்கள் தெரியுமா? அடி ஆண்டாள்! அந்தத் திருப்பாவையைக் பாடிக்காட்டடி!" என்றாள் ராதா!

ஆண்டாள் திருப்பாவையைத் தொடங்கினாள்.

*"குத்து விளக்கெரியக் கோட்டுக்*
*கால் கட்டிலின் மேல்*
*மெத்தென்ற பஞ்ச சயனத்தின்*
*மேலேறிக்*
*கொத்தலர் பூங்குழல் நப்பின்னைக்*
*கொங்கை மேல்*
*வைத்துக் கிடந்த மலர்மார்பா*
*வாய் திறவாய்!"*

ஆண்டாள் பாடி முடிப்பதற்குள் சிந்தாமணிக்கு ஆத்திரமும் வெட்கமும் தாங்க முடியவில்லை.

"ஆண்டாள்! இது என்ன விகாரமான பாட்டு! நிறுத்து! நிறுத்து!"! என உத்திரவு போட்டாள் சிந்தாமணி.

"இது இந்த ஆண்டாளின் பாட்டில்லையடியம்மா. பெரியாழ்வாரின் திருப்புதல்வி ஆண்டாள் அம்மை, பெருமானை நோக்கிப் பாடிய பக்திரசப் பாட்டாகும் பெண்ணே;" எனக்கூறி சிரித்தாள் ஆண்டாள். அந்தப் புறாக் கூட்டமே நகை முழக்கம் செய்து கொண்டு புறப்பட்டது திருக்குளம் நோக்கி!

சிந்தாமணி, தனது சிறுத்த இடையில் செப்புக்குடம் தாங்கி நட்சத்திரங்களுக்கிடையே நிலவு போல நடைபோட்டாள். தாமரையில்லாத அந்தத் தடாகத்திற்கு அவள் தாமரையானாள். தந்தமோ --தங்கமோ--என மயங்கிடும் நிலையிலுள்ள அவளது அழகுமேனி முழுமையும் சுவைத்திடும் பாக்கியம்;அவள் உடுத்தியிருக்கும் பச்சை வர்ணச் சேலைக்குக்கூடகிட்டுவதில்லை; அந்தப் பளிங்கு நீர்த் தடாகம் அந்தப் பெரும் பாக்கியத்தை நாள் தோறும் அதிகாலையில் பெற்று மகிழ்கிறது. தடாகத்து நீரை அள்ளி இறைத்து-ஆடிப்பாடி— அவளையுமறியாது எழுந்தஉணர்ச்சிப் பிரவாகத்தோடு நீராடி நீந்தி விளையாடினாள், சிந்தாமணி.

அவள் எதிர்பார்த்த வெள்ளிக் கிழமையல்லவா வந்துவிட்டது— விரைவில் வீடு திரும்ப வேண்டும்; அவர்கள் வந்தாலும் வந்து விடுவார்கள்—அதற்குள் அலங்காரங்களை முடித்துக் கொள்ள வேண்டும் என்ற அவசரம் வேறு அவளை நிலைதடுமாறச் செய்தது. அப்படி அவளுக்கு என்றுமில்லாத மகிழ்ச்சியைத் தரக்கூடிய அந்த நிகழ்ச்சிதான் என்ன?

(தொடரும்)

மு. கருணாநிதி

# பசிக்காரன் இங்கே! ★ ★ பழத்தோட்டம் அங்கே!

"ஒரு நாட்டின் முன்னேற்றத்தை அதன் இரும்பு உருக்கு, மின்சார சக்தி இவைகளைக் கொண்டே மதிப்பிட முடியும்."

"தொழில்களை ஒரே இடத்தில் குவிப்பதால் பல அபாயங்கள் ஏற்படும்."

"அத்யாவசியப் பொருள்களுக்கும் பிறரை நம்பியிருக்கும் எந்த நாடும் சுதந்திரம் பெற்றதாகக் கூற முடியாது."

அகில இந்தியப் பண்ட உற்பத்தியாளர் மாநாட்டை ஏப்ரல் 14 அன்று திறந்து வைத்த பண்டித நேரு வெளியிட்ட கருத்துக்களில் சில; மேலே தரப்பட்டிருப்பவை.

18ம் நூற்றாண்டில் ஐரோப்பிய நாடுகளில் ஏற்பட்ட தொழிற்புரட்சியையும், அதன் விளைவுகளையும் எண்ணிப் பார்ப்போர்; உலகம் ஒரு நாட்டை எதைக் கொண்டு மதிப்பிடுகிறது; என்பது தெளிவாகின்றது. அந்த மண்டலங்களில், தொழிற் புரட்சிக்குப் பிறகு எழுப்பப்பட்ட ஆலைகள் உலக அரங்கில் அந்த நாடுகளின் அந்தஸ்து உயர்ந்திருப்பதற்கோர் சான்றாகிறது.

"தொழில் மயமாகும் வேலை துரிதமாக செயலளவில் நடைபெறுவிட்டால் இந்தியாவில் சமூக அரசியல் துறைகளில் பெரும் புரட்சி ஏற்படும்."

கல்கத்தா கூட்ட மொன்றில் பேசும்போது பேராசிரியர் மகாலனேபிஸ் எனபவர் இப்படிக் குறிப்பிடடிருக்கிறார்.

நாட்டைத் தொழில் மயமாக்குங்கள், இல்லையேல் பெரும் புரட்சிக்கு வித்திடடோர் ஆவீர்கள், என்று எச்சரித்திருக்கிறார் அவர்.

அவர் குறிப்பிட்டிருப்பதோ 'இந்திய உபகண்டத்தைத் தொழில்மயமாக்குங்கள்' என்பது! ஆனல்..................!

அவர்கள் தொழில்மயமாக்கி வரும் பகுதி—இந்திய உபகண்டமலல; வடநாடு! வடநாட்டை வளப்படுத்துவதில் மத்திய சர்க்காருக்கு இருக்கும் அக்கரையில், ஆயிரத்தில ஒரு பங்குகூட தென்னகத்திற்குப் பயன் படுவதில்லை.

'புதிய தொழில்கள் துவங்க வேண்டும்: என்ற கவலை மாநிலங்களுக்குத் தேவையில்லை; மத்திய சர்க்கார் கவனித்துக் கொள்ளும்' என்று உரிமை பேசிவிட்டு; டில்லி வட்டாரம், தென்னகத்திற்கு முதுகைத் திருப்பிக் காட்டுகிறது.

இந்நிலையில்,

'பெரிய தொழில் திட்டங்கள் துவங்கும் பொறுப்பு டெல்லியிடம்தான் இருக்க வேண்டுமே தவிர, மாநிலங்களுக்கு அந்த உரிமை இருக்கக்கூடாது' என்று திட்டக் குழு வேறு முடிவெடுத்திருக்கிறதாம்;

இதன் விளைவாக தென்னகத்தின் உரிமையை, டில்லி ஏகாதிபத்தியம் மறைமுகமாகப் பறித்துக்கொள்ளுகின்ற முயற்சிதான் இது—என்பதை யாரும் மறுக்க முடியாது.

இந்த வஞ்சகத் திட்டத்தின் பயனை—வாழ்விக்க இருக்கும் தென்னகத்து அரசுக் கட்டிலை அலங்கரித்துக் கொண்டிருக்கும் காமராசரோ, 'பெரிய கனரகத் தொழிற்சாலை ஏதாவதொன்றை இங்கே துவக்குவதற்கு டில்லியை வற்புறுத்த முயற்சிக்கிறேன்!'—என்று திருவாய் மலர்ந்திருக்கிறார் சென்ற கிழமை.

'இங்கே' இவர் முயற்சி எடுக்க நினைத்துக் கொண்டிருக்கும் போதே—'அங்கே' இருந்து கிளம்பும் 'ஆலையரசர்'களின் சிரிப்பொலி ஏற்கெனவேபுண்பட்டிருக்கும் நெஞ்சங்களைக் குத்திக் குடைகிறது.

தொழில் துறையில் பின்தங்கியிருக்கும் தென் மண்ணில்; கனரகத் தொழில் துவக்குவதற்கான மூலப் பொருள்கள் ஏராளமாகக் கிடைப்பதாக சென்ற கிழமை டெல்லி சட்டசபையிலே, இயற்கை வசதி இலாக்கா மந்திரி கே. டி. மாளவியா குறிப்பிட்டிருக்கிறார்! தமிழகத்தில் எட்டுப் பிரதேசங்களில் இரும்புக் கனிகள் உள்ளனவாம்; இந்த செய்தி கேட்டு மகிழ்வதற்குள்ளாகவேவடக்கேஇருந்து மற்றொரு செய்தி நம்மையெல்லாம் திகைப்படையச் செய்திருக்கிறது!

இந்தியாவிலேயே மிகப் பெரிய ரயில்வே தொழிற்சாலை ஒன்றை அமைக்க முடிவு செய்திருக்கிறதாம் டில்லி சர்க்கார்!

அலகாபாத் அருகே அந்த பிரம்மாண்டமான தொழிற்சாலையை அமைக்கப் போகிறார்களாம் !

பெரம்பூர் 'கோச்பாக்டரி'யைப் பார்த்துவிட்டுடில்லியின் 'தாராள மனப்பான்மை' யைக் குறித்து மகிழ்ந்தோர் கூட, இது கேட்டு ஊமையாகி விட்டனர்.

பெருமை பேசிக் கொண்டிருந்தோருக்கு 'பேரிடியென' இந்த செய்தி கிடைத்திருக்கிறது.

அலகாபாத்துக்கு நான்கு மைல் தொலைவிலுள்ள 'பாபா மாவ்' என்ற இடத்தில் எழுப்பப் படவிருக்கிறதாம் இந்தத்தொழில் மனை.

அதற்கான ஆக்க வேலைகளெல்லாம் இந்த ஆண்டிலேயே துவக்கப்பட்டு விடும் என்று அறிவிக்கிறது டில்லி சர்க்கார் !

பிலாய் நகரிலே பலகோடி முதலீட்டோடு, வெளி நாட்டு தொழில் நிபுணர்கள் உதவியுடன் துவக்கப் பட்டிருக்கும் பிரம்மாண்டமான இரும்பு உருக்கு தொழிற்சாலையைக் கட்டி முடிப்பதற்குள்ளாகவே மற்றொரு தொழில்மனைக்கு அஸ்திவாரம் போடுகிறது வடக்கு !

14,000 ஏக்கர் நிலம் தேவைப்படுகிறதாம்! பிலாய் நகரிலே எழுப்பப்படும் அந்த இரும்பு உருக்கு ஆலைக்கு !

வெளி நாட்டிலே இருந்து பல ஆயிர ரூபாய் சம்பளத்தில் தொழிற்துறை நிபுணர்கள் இறக்குமதி செய்யப்படுகிறார்கள்; எல்லாம் அங்கே! ஆனல் ஏமாற்றப் பட்டுவரும் தென்னகத்தைப் பார்த்து, 'புதிய தொழில் துவக்குவது பற்றி எங்களுக்கும் அக்கரைஇருக்கிறது' என்று கூறி வாயடைத்து விடுகிறது டில்லி !

தென்னகத்திற்கு டில்லி வட்டாரம் இழைத்து வரும் இந்தக் கொடுமையான அநீதிக்கு டில்லி மந்திரி கே. சி. ரெட்டி போன்றவர்கள் வேறு ஆதரவு தேட முயலுகிறார்கள்,

"டில்லியால் தென்னுடு புறக்கணிக்கப்படுவதாகக் கூறுவதெல்லாம் நியாயமானதல்ல ! வட இந்தியாவிற்கு சர்க்கார் அதிக ஆதரவு காட்டுவதாகக் கூறுவதும் தவறு!" என்று குறிப்பிட்டிருப்பதுதான் நமக்கெல்லாம் வியப்பாக இருக்கிறது.

அங்கே விண்ணை முட்டும் ஆலைகள் நாளுக்கு நாள் பெருகிக்கொண்டிருப்பதைப் பார்த்து தேசிய வட்டாரத்திலே இருக்கும் பலரிடமிருந்தே 'கண்டனக் கணைகள்' கிளம்பியிருக்கும் இந்த நேரத்தில்தான், வடக்கு-தெற்கை புறக்கணிக்கவில்லை! என்று வாய் கூசாமல் மொழிந்திருக்கிறார் அமைச்சர்!

இந்திய உபகண்டத்தில் முறைப்படித் தொழிற்பெருக்கம் ஏற்படவில்லையென்பதை உணர்ந்து தான் பேராசிரியர் 'பெரியதொரு புரட்சி'க்கு வித்திட வேண்டாம்; விவேகத்தைப் பின்பற்றுங்கள்—என்ற தோரணையில் பேசியிருக்கிறார் என்பதை யாருமே புரிந்து கொள்ள முடிகிறது !

என்றாலும்; தென்னகத்தின் கண்ணீரை மயக்குமொழி பேசி தடுத்துவிட நினைக்கிறார்கள், மாய் மாலக்காரர்கள்!

அங்கோ, 'பிலாய்'யும், 'பாபா மாவ்'வும் வளர்ந்த வண்ணம் இருக்கின்றன!

காமராசரோ "மீசையில் மண் ஒட்டவில்லை" என்று வாய்ஜாலம் பேசிக்கொண்டிருக்கிறார்!

மாநிலத்து அமைச்சர்களோ 'காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்' என்ற விதத்தில் 'பதவிப் போதையில்' சுய உணர்வையே இழந்துவிட்டு அலங்காரப் பதுமைகளாய், 'வந்ததைப்' பேசிக் கொண்டு திரிகிறார்கள்.

நேரு பண்டிதரோ, "தொழில்களை ஒரே இடத்தில் குவிப்பதால் பல அபாயங்கள் ஏற்படும்"—என்று அங்கேபேசுகிறார்:-ஆனல்

ஆடையிலிருந்து—ஆணிவரை 'வெளி' இடத்தின் தயவை எதிர்பார்க்கும் நிலைக்கு ஆளாக்கப் பட்டுவிட்ட 'தென்னக'த்திற்கும் சேர்த்துதான் சுதந்திரம் வாங்கி விட்டோம் என்று இன்னமும் சில தேசியத்தார்கள் பேசிக்கொண்டிருக்கிறார்களே; அதை நினைக்கும் போதுதான் நமக்கு அனுதாபம் ஏற்படுகிறது.

'தொழில்களை ஒரே இடத்தில் குவிப்பது ஆபத்து' சொல்லுகிறார் நேரு!

நடப்பதோ: 'பிலாய் நகர்', 'பாபாமாவ்' அங்கே!

பேராசிரியர் குறிப்பிட்டது போல, 'பெரியதொரு புரட்சி'க்கு வித்திட்டுக் கொண்டிருக்கிறது டில்லி சர்க்கார்!

இங்கிருப்பவர்களோ சூதறியா மல் இன்னும் பாடிக் கொண்டிருக்கிறார்கள் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று !

அங்கே செல்வச் சுரங்கங்கள் மத்திய சர்க்கார் ஆதரவோடு இங்கிலையில் 'ஏழை' திராவிடம் வாழ்வு பெறுவது தான் எந்நாளோ ?

---

தலைமைக் கழக அறிக்கை.

## உறுப்பினர் சேர்த்தல்

### காலம் நீடிக்கப்படுகிறது

பல கிளைக்கழகங்களிலிருந்து உறுப்பினர் சேர்த்த தாள்கள் தலைமை நிலையத்துக்கு வந்து சேருவதில் ஏற்பட்டுள்ள தாமதத்தை முன்னிட்டும், மேலும் சில ஊர்களில் உறுப்பினர் சேர்க்கும் பணி இன்னும் முடிவுறுதாலும், உறுப்பினர் சேர்க்கும் காலம் மே 15ந்தேதி வரையில் நீடிக்கப்படுகிறது!

எனவே, 15—5—56-ம் நாளை உறுப்பினர் சேர்ப்பதற்கான இறுதி நாளாகக் கொண்டு, உறுப்பினர் சேர்க்கும் விண்ணப்பத் தாள்களைத் தலைமை நிலையத்திற்கு அனுப்பி வைக்கும்படி கிளைக் கழகச் செயலாளர்கள் கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

'அறிவகம்' சென்னை-13 | இரா. நெடுஞ்செழியன்,

10—4—1956 | பொதுச் செயலாளர், தி. மு. கழகம்.

---



## பூவையின் புடவை

'புனலிடை மூழ்கிப் பொழிலிடை உலவி; பொன்னர் இழையும், துகிலும் பூண்டு, கனி மொழி பேசி, இல்லறம் நாடும்' நல்லோர் வாழ்ந்த நாடு இது !

பொன்னர் இழை—பொன்னலே இழை பின்னி, பண் ஆளும் பெண்ணின் இடையிலே பூட்டி, விழிக்கடையாலே அவள் தரும் பார்வையைப் பருகினன் !

கைத்தறியின் மூலம் அவன் காட்டிய விசித்திரம் கண்டு வையகம் வாய் பிளந்தது!

பட்டும், பருத்தியும் தமிழனின் கைபட்டவுடன் தன்மை மாறி, தணலிடைப் பட்ட தங்கம்போல மின்னலுருக் கொண்டன !

'ஆவி அன்ன அவிர் நூல் கலிங்கம்'

'கோட்டைக் கரைய பட்டை'

'இழை மருங்கு அறியா நுழை நூல் கலிங்கம்'

"பாம்புரி அன்ன வடிவின காம்பின் கழைபடு சோலியின் இழையணி வாரா ஒண்பூங் கலிங்கம்"

—பாம்பு தோல் உரிக்குமே; அதைப் போல மென்மை வாய்ந்ததாம், தமிழகத்துத் தறியிலே பின்னப்படும், ஆடை !

ஆவியைப் போல கண்ணுக்குத் தெரியாத அளவுக்கு இழைகள் பின்னிப் பின்னிச் செல்லுமாம்!

—அத்தகைய பழஞ்சிறப்பு பெற்ற நூலாடைகளைத் தயாரித்தவர்கள் இன்று புதுச் சிறப்பொன்றை அடையப் போகிறார்கள்!

இங்கிலாந்துப் பேரரசி எலிசபெத் ராணியார் மாலைக்கால உடையாக 'இந்தியப்புடவை'களை அணியப் போகிறாராம்! அதற்காக- சில பிரத்யேகப் புடவைகளுக்கு 'ஆர்டர்' கொடுக்கப் பட்டிருக்கிறதாம்!

-நெசவுத் தொழிலாளிகளின் நெஞ்சு இனிக்கும் செய்தி இது!

'கவுன்' அணிந்த காரிகை எலிசபெத் முதல் தடவையாக புடவை அணியப் போகிறார்!

'மகாராணியார்' வழி காட்டிவிட்டால் பிறகு ஐரோப்பா முழுதுமே அவர் வழி செல்ல, பிறகுபெண்டிர் யாவரும் புடவை அணியும் வழக்கம் பிரபலமாகிவிடும்!

கோஹினூர் வைரத்துக்குப் பக்கத்திலே இந்திய நாட்டுப் புடவைகள்!

நிச்சயமாக அந்தப் புடவைகள் வைரத்தைவிட வர்ணஜாலம் காட்டிப் பிரகாசிக்கும் என்பதில் வியப்பொன்றும் இருக்க முடியாது!

ஆனல்; அந்தப் புடவைகளை நெய்து தந்த நெசவாளியின் நிலை?

நினைக்கவே முடியவில்லை; அந்த அளவுக்கு ஏழ்மைப் படுகுழியில் விழுந்து புரளுகின்றனர் நெசவாளிகள்!

தறியை நம்பி வாழ்வோர் தரித்திரராய் அலைகின்றனர்!

தாயைக் கொன்று, அவள் தோலைக் கொண்டு செருப்பு தைத்து, வெயிலில் வாடுவோருக்கு 'பாதரட்சை தானம்' செய்தானும் ஒருவன்!

அந்தக் கதையாகத் தானிருக்கிறது, இந்திய அரசினர் நெசவாளர்பால் வகுத்துக் கொண்ட கொள்கையும் !

நெசவாளரின் விழிகளைத் தோண்டியெடுத்து, அவைகளை அழகான 'பார்டர்'களாக செய்து. எலிசபெத் ராணியின் புடவையிலே பதிக்கப்போகிறார்கள் !

வள்ளுவரை வழங்கிய சமுதாயத் தோரின் நரம்புகளை உரித்தெடுத்து, அவைகளைத்தான். ராணியின் ஆடைக்கு ஜரிகைக் கோலமாகப் பயன் படுத்தப் போகிறார்கள்!

அம்பர் சர்க்காவாம்—புது வழியில் கதர் நூல் உற்பத்தி செய்யும் சாதனமாம்! —காதி அபிவிருத்தியில் காட்டப்படும் அக்கரையில் ஆயிரத்தில் ஒரு பங்குகூட அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் நெசவாளர்பால் காட்டப்படுவதில்லை, இந்த அரசாங்கத்தால் !

கவுன் அணிவோர் புடவைகள் அணிந்தென்ன; நெசவாளரின் நெற்றியிலே வழியும் வியர்வையைத் துடைப்பதற்கு நாதியில்லையே, இந்த நாட்டில்! எலிசபெத் இதைக் கேள்விப்பட்டால் - பட்டினிப் பட்டாளங்களாக அவர்கள் பவனி வருவதை நேரில் பார்த்தால் நிச்சயமாக அவரணியும் புடவையின் பெருமை மங்கிவிடும்,

★

---

## கண் தந்தவர் - கண் மூடினர்!

நெஞ்சு கலக்கிடும் செய்தி யொன்று நம்மைத் தாக்கித் துடித்திட வைத்தது. சென்ற 15ம் நாள் பிற்பகல் சென்னை கண் மருத்துவசாலையின் மேலதிகாரி முத்தையா அவர்கள் இருதய நோயினல் தாக்குண்டு திடீரென இயற்கை யெய்தினர். இந்தியா விலேயுள்ள முதன்மையான கண் மருத்துவர்களில் தலை சிறந்தவருள் ஒருவர் முத்தையா. அவரைச் சாவு இவ்வளவு சீக்கிரம் கொள்ளை கொண்டு போய்விடும் என யாரும் எதிர்பார்த்திடத்தானில்லை.

ஆயிரக் கணக்கானவர்களுக்கு கண் வழங்கிய பெருமை முத்தையாவைச் சாரும்.

நோயுற்றவர்களிடம் பழகிடும் பண்பு- அவர்களுக்கு ஆறுதல் வழங்கும் அன்புப் புன்னகை—மென்மை கலந்த சிகிச்சை-தேன் றனினுமினிய பேச்சு-இவைகளால் அனைவரையும் கவர்ந்த உத்தமர் முத்தையா!

அவர் மறைந்து விட்டார், அவரை நம்பியிருந்த பலரையும் விட்டுவிட்டு! வயது ஐம்பத்தி மூன்று! ஆனல் வாலிபம் தோற்றத்திலே மட்டுமல்ல; உழைத்திடும் வன்மையிலும் காணப்பட்டது. இயற்கையெய்திய னானன்றுகூட அவர் மருத்துவ மனையில் பணியாற்றி விட்டுத்தான் திரும்பினாராம், சென்னையிலே நிறுவப்பட்டுள்ள "கண் தான பாங்க்" முத்தையாவின் முயற்சியால் உருவானதுதான்!

ஆருயிர்த் துணைவியையும் அருமை மகனையும் விட்டுப் பிரிந்த முத்தையா — அவரது குடும்பத்தினரையும் உறவினரையும் மட்டுமின்றி, நம்மையும் கண்ணீர் வெள்ளத்திலே மிதக்கவிட்டு விட்டார் என்றால், அவரால் விழியொளி பெற்றவரும் எனபது மட்டுமுயலல; அவரது அன்புக்கும் அடிமையாகி விட்டோம் என்பதுதான் உண்மை.

முத்தையாவை இழந்து தவிக்கும் குடும்பத்தினருக்கும் நண்பர்களுக்கும் நம் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். அதே நேரத்தில் இந்த ஈடு செய்ய முடியாத நஷ்டத்தால் துவண்டிருக்கும் நமக்கு யார் ஆறுதல் கூறப் போகிறார்கள் எனத் தெரியாது தவிக்கிறோம்.

---



---

செய்தி :

## மாநில மாநாடு

திருச்சியில் மே, 17, 18, 19, 20-ல் நடைபெற விருக்கும் 2-வது தி. மு. கழக மாநில மாநாட்டில், ஒலி — ஒளி அலங்கார வேலைகளை திருச்சி தோழர். எஸ். ஏ. ஜி. ராபி அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டு. வேலைகளை கவனித்து வருகிறார்.

## பணி புரிவோம் வாரீர்...

★ 4-ம் பக்கத் தொடர்ச்சி

கொலை வெறியர்களால் கொத்தப் பட்டார். தூக்கு மாட்டித் தொங்க விட்டனர் துரோகிகள்! அவரது குடும்பம் ஆதரவற்று தவித்தது. அந்தக் குடும்பத்தை தி. மு. கழகம் தன் குடும்பமாகவே பாவித்தது. வேலாயுதத்தின் மகளுக்கு இரண்டாண்டுகளுக்கு முன்னர் திருமணம். அண்ணவும் இன்னும் கழகத்திலேயுள்ள மூன்று நான்கு பேரும் சேர்ந்து ஏறத்தாழ இரண்டாயிரம் ரூபாய் வரையிலே திருமணச் செலவுக்கான நன்கொடையாகத் தந்தனர்.

நெல்லிக்குப்பம் மஜீது கொள்கை வீரன், கொடியோர் சிலர் அவன் குடலைக் கிழித்து கொன்று போட்டனர். தி. மு. கழகம் அவனது ஏழைப் பெற்றோரைப் பார்த்து கண் கலங்கியது. இரண்டாயிரம் ரூபாய் அளவிலே ஒரு கரும்புத் தோட்டம் அவர்களுக்கு வாங்கித் தரப்பட்டது. இயக்கப் பணியாற்ற வந்தனர், இறந்து பட்டனர். நமக்கென்ன என்றே இயக்கத்திற்கு சேவை புரிய வந்தனர், வழக்குகளில் சிக்கினர்; நாம் ஏன் தலையிட வேண்டுமென்றே தி. மு. கழகம் இதுவரை எண்ணியதில்லை. எண்ணியிருந்தால் தூத்துக்குடி சதி வழக்கிற்கான தொல்லைகளைத் தாங்கி யிருக்காது! கல்லக்குடி வழக்கிற்காகவும் கஷ்ட நஷ்டங்களை ஏற்றிருக்காது! தேவையான நேரங்களில்—நமது தோழர்கள் அடக்குமுறைக்கு ஆளாகிவிடும் வேளைகளில் தலைமையின் சார்பாகவோ—அல்லது மாவட்ட வாயிலாகவோ, கிளைக் கழக வாயிலாகவோ அவர்களுக்குத் துணை நிற்கத் தி. மு. கழகம் தவறியதில்லை. இந்த எண்ணம்; நாம் இருந்த இடத்திலேயே எழுந்தது. ஆனால் செயல்படுத்த அனுமதியில்லை. மீறினால் விடுதலை சீழிடும் நேரம்!

அந்தக் கட்டத்தைத் தாண்டி புதிய கட்டத்திற்கு வந்திருக்கிறோம். புதிய கட்டத்திலும் ஆறு ஏழு ஏடுகளைப் புரட்டி விட்டோம், நாமெல்லாம் ஒரு குடும்பம் என்ற பாச உணர்ச்சியோடு, குமரி முனையில் கொள்கைக்காகப் பணியாற்றிக் கொடுமை அனுபவிப்பவனுயினும்—நமது எல்லைக்கோடு தாண்டி தொல்லை அனுபவிக்கும் தோழனுயினும் நம் குடும்பத்தைச் சேர்ந்தவர்களே என்ற உரிமை உறவோடு உலவி வருகிறது தி. மு. கழகம். போர்த்தழும் பேற்றுச் செயலற்றுப் போன வீரர்களின் குடும்பம் வணக்கத்திற் குரிய குடும்பமாக மட்டுமின்றி நமது கண்காணிப்புக் குரிய குடும்பமாகவும் கருதப் பட்டு வருகிறது.

இது தி. மு. கழகத்தின் தனிச் சிறப்பு. இந்தச் சிறப்பு மிக்க பாசறையின் மாநாடு தான் திருச்சியிலே மே, 17, 18, 19, 20 தேதிகளிலே நடைபெற இருக்கிறது.

பணி புரியும் தோழர்களை ஊக்குவிக்கவும் - பணி புரிந்திட இன்னும் பலரை அழைத்திடவும் தேவையான பண்பைப் பெற்றது தி. மு. கழகம். அந்தப் பண்புகளின் ஓரிரு எடுத்துக் காட்டுதான் மேலே காணப் படுபவை.

**பாராட்டத் தலைவர்கள் இருக்கிறார்கள் — பயன் பெற நாடு இருக்கிறது— பணி புரிய நாம் தயாராயிருக்கிறோம் என்று கூறிடுவது போல — கூடிடுவோம் திருச்சி மாநகரில்! மே-17- 8-19–20-திராவிடத்தின் வரலாற்றிலே புதிய திருப்பு முனை! மறவாதீர்! மறவாதீர் !! மே—17-18-19-20!**

❊

## கள்ளிக்காடு...

★ 5-ம் பக்கத் தொடர்ச்சி

*இனிய குரலோடு ஒலிக்கும்போது தான் "யானறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல் இனிதாவதெங்கும் காணேம்" என்ற பாடல் என் நினைவிற்கு வரும்! அவர் குரலிலே அவ்வளவு ஜீவன்! கேட்டாரை பிணித்திடும் கவர்ச்சி ஒன்று இருந்தது. எனவே காலம் போவதே தெரியாமல் நான் அவர் கற்றுத்தந்த சுந்தரத் தமிழிலே சிந்தையை செலவிட்டுக் கொண்டிருந்தேன்!*

*எனக்குப் பாடம் சொல்லிக் கொண்டே இருப்பார்' இடையிடையே, 'கற்பகம்!' என்று ஒரு குரல் எழும்பும்!*

*அறைக்குள்ளே இருந்த படியே 'என்ன !' என்று ஒரு எதிரொலி மிதந்து வரும்'*

*'நீரோ, மோரோ' தேவையைச் சொல்லுவார் அம்பலவாணர்.*

*இரண்டொரு விநாடிகளில் முகம் பார்த்த விழிக்கோணம் நிலம் நோக்க, அம்பலவாணருக்கு முன்னால் அதைக் கொண்டு வந்து வைத்து விட்டு உடனே சென்று விடுவாள் கற்பகம்!*

★

*அம்பலவாணரின் இரண்டாவது மனைவி கற்பகம்; திறமை மிக்க ஓவியன் வண்ணத் தூரிகைகளால், அழகொழுகத் தீட்டி விட்ட சித்திரம் போன்ற எடுப்பான தோற்றம், பெண்களுக்கே இருக்க வேண்டிய அந்த ஜீவகளை-கற்பகத்திற்கு தனி பழகாக அமைந்திருந்தது! அவள் நிலா முகத்தில்ஏதோ உயிர் சுழற்சி! எந்த இதயத்தையும் மலரச் செய்யும் ஒரு காந்த சக்தி ஒளி வீசிக் கொண்டிருந்தது!*

*அம்பலவாணர், 'அவருக்கேற்ற அழகு ஜோடி கற்பகம்! சோடை சொல்ல முடியாத பொருத்தம், இரண்டாம் தாரம்தான் என்றாலும் வயோதிகத்தின் அணைப்பிலே சிக்கி விட்டவரல்லவே!*

*அதோடு கற்பகமே காதலித்து மணம் செய்து கொண்டவர்தானே அம்பலவாணர்! திருமணமாகி பல ஆண்டுகள் கடந்தும்கூட, 'குழலையோ, யாழையோ' தோற்கடிக்க ஒரு 'குளிர்நிலவு' இல்லாத குறை தவிர, அம்பலவாணருக்கு வேறொரு கவலையும் இருந்தது கிடையாது!*

*'பிள்ளை தமிழ்' போதிப்பார்! அவர் விழிகளில் நீர் கலங்கி நிற்கும். அதை நான் தெரிந்து கொள்ளக் கூடாது என்பதற்காக மறைக்க முயல்வார்!*

*கற்பகம்! அவள்தான் தமிழையாவின் கவலை போக்கும் மாமருந்து ! மாசு மருவற்ற குடும்ப விளக்கு தன் இதய ஜோதியாகி விட்டது என்பதிலே மட்டும் அவருக்கு எப்பொழுதும் ஒரு மகிழ்ச்சி இருந்து கொண்டு வந்தது!*

*கற்பகத்திடம் தன் உயிரையே வைத்திருந்தார் அம்பலவாணர்!*

முப்பது வயதைக் கடந்து கொண்டிருந்த கற்பகத்தின் விழிகளிலே எப்பொழுதும் ஒரு ஏக்கம் நிழலாடிக் கொண்டிருக்கும். தளர்ந்து காணப்படும் மேனியிலே ஒரு காந்த சக்தி, அவள் இதழ்களில் ஓடியிருக்கும் மெல்லிய கோடுகளில் ஏதோ ஒரு துடிப்பு; பார்வையிலே ஒரு தவிப்பு. கண்களுக்குக் கீழே விழுந்திருக்கும் கரும் வளையங்களில் ஒரு கவர்ச்சி பொதுவாக அவள் உள்ளத்தில் ஏதோ ஒரு போராட்டம்! வெளியில் சொல்ல முடியாத ஒரு ரகசியம்! அவள் இதயத்தோடு முணுமுணுத்துக் கொண்டிருந்தது. அகம் காட்டும் கண்ணுடிதானே முகம். அவள் இதயத்து உணர்ச்சிகளை அப்படியே படம் பிடித்துக் காட்டிற்று அஜந்தாவின் எழில் காட்டும் அவள் அழகு முகம்!

அந்த எல்லோரா சித்திரத்தின் இதயத் துடிப்புகளை அம்பலவாணரால் புரிந்து கொள்ள முடியவில்லை என்று எப்படிக் கூற முடியும்? சமுதாயத்தின் கண்களுக்குத் தெரியக்கூடாது என்பதற்காக மனித இனம் மூடி மறைக்கும் எத்தனையோ ரகசியங்களில் 'அதுவும்' ஒன்ருக இருக்கலா மல்லவா ?

அவர் உள்ளப் புழுக்கத்தை. மனப் புயலை, இதயத்தின் அடித்தளத்திலே வீசிக் கொண்டிருக்கும் சூறுவளியை வெளிக்குக் காட்டாமல் மறைத்து வைத்தும் இருக்கலாம்! யார் கண்டார்கள்?

அன்றிரவு மாணவர்களை உல்லாசப் பயணத்திற்கு அழைத்துச் சென்றிருந்ததால் அம்பலவாணர் வெளியூரில் தங்க நேரிட்டது. என் தந்தையும் சிற்றன்னையும். அடுத்த ஊர்த் திருமணத்திற்குப் போயிருந்தார்கள், அன்று வீட்டில் நான் மட்டும் தனியாக இருந்தேன். அன்றிவு, முதலில் குறிப்பிட்டிருந்த அந்த இரவு. என்னை யாரோ முத்தமிடுவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. விழித்துக் கொண்டேன், என் உதடுகள் ஈரமாக்கப் பட்டிருந்தது. எதிரே கற்பகம் என்னை ஏக்கத்தோடு பார்த்துக் கொண்டிருந்தாள், அவள் உதடுகள் படபடத்தன. இதழ்களைக் கூட்டிக் காட்டினாள். 'இன்பமே இன்னொரு முத்தம்!' என்று கேட்பது போலிருந்தது, பழத்தோட்டத்தில் புகுந்து விட்ட 'பசி' காரி போல் அன்று அவள் என்னிடம் நடந்து கொள்ளுவாள் என்று நான் எதிர்பார்க்கவே யில்லை,

ருசி கண்ட பூனை உரியைத் தாவாமல் இருக்குமா?

அம்பலவாணர் இல்லாத நாளெல்லாம் இன்ப நாளாக இருந்தது அவளுக்கு!

கண்ணுக்குப் பிடித்தவர்; காதல் மணம் புரிந்து கொண்டவர் அம்பலவாணர்,

பிறகேன் அவர்கள் தாம்பத்திய உறவில் இந்த 'உடைச்சல்!'

காரணம் என்ன?

இந்த விளையாட்டு தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டுவந்தது! அதில் எனக்கும் ஏதோ ஒரு 'பொழுது போக்கு' இருப்பதாகவே தோன்றியது; பருவக்கனல் தன் 'வெறி நாக்கு'களை அலைய விட்டுக் கொண்டிருந்த வாலிபம்! அந்த வண்ணப் பூச்சிலேமயங்கிக் கிடந்தேன்.

எங்கள் உறவு அம்பலவாணருக்கு எப்படியோ தெரிந்து விட்டது. யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல், அம்பலவாணர் திடீரென்று அடுத்த தெருவிற்கு ஜாகையை மாற்றிக் கொண்டார். ஆனாலும் அவர் நடைமுறைகளில் மாற்றம் எதுவும் காணப்படவில்லை.

கற்பகத்திடமும் எப்போதும் போல் அன்பாகவே நடந்து கொண்டார்.

அவர் முகம் மட்டும் புகை படிந்த ஓவியம் போல் 'பழைய' தெளிவு காணப்படவில்லை,

அடுத்த தெருவிற்கு குடிபோனதிலிருந்து கற்பகத்திற்கு உடல் நிலை சரியில்லை என்று யாரோ சொல்லக் கேட்டேன். இனியும் அம்பலவாணரின் முகத்தில் விழிக்க என் மனம் இடம் தரவில்லை! அதைவிடக் கொடுமை நிறைந்த செய்தியொன்று என் இதயத்திலே எரிதணலை வாரிக் கொட்டிவிட்டது.

'அம்பலவாணருக்கு சித்தப் பிரமை' என்றால் இதை நம்ப முடியவில்லை; மறுநாள் அந்ததெரு வழியாக வந்து கொண்டிருந்தேன்.

'மானம், கற்பு, தெருப்புழுதி—சீ; மானங்கெட்ட சமுதாயம்!'—என்று கூறிவிட்டு கையிலிருந்த ஏதோ ஒரு புத்தகத்தை வீசி எறிந்தார்!

அந்தப் புத்தகத்தைக் கையிலே எடுத்துப்பிரித்தேன். 'பெண்மனம் ஒரு இருட்டுக் குகை; புதிர்கள் நிறைந்த ஒரு பயங்கரச் சுரங்கம்' என்று அதிலே பொறிக்கப் பட்டிருந்தது. புத்தகத்தை மூடிவிட்டு திரும்பினேன். கண்களில் நீர் ததும்ப, ஜன்னல் கம்பிகளில் முகம் புதைத்துநின்றாள் கற்பகம்!

மீண்டும் அம்பலவாணரின் 'பிதற்றல்' ஆரம்பமாகி உச்சக் கட்டத்தை அடைந்து கொண்டிருந்தது!

தெளிந்த நீரோடை போல் இருந்த அவர் வாழ்க்கை! ஐயோ, இன்று...!

தடாகத்தில் தாமரை மட்டுமா மலருகிறது? எருமை கூடத்தான் புரளுகிறது! அதற்கு யார் என்ன செய்ய முடியும்? இப்படி ஒரு குரல் என் இதயத்தின் அடித்தளத்திலே ஒலித்துக் கொண்டிருந்தது,

கற்பகம்! அந்த சந்தன நிலவு ஏன் கள்ளிக் காட்டில் ஒளி பொழிய வேண்டும்?

காரணம் கூற முடியுமா?

அதற்கு மேலும் ,என்னால் அங்கு நிற்க முடியவில்லை, மயக்கம் வரும்போல இருந்தது. கால் சென்ற திசையில் நடந்து கொண்டிருந்தேன்.



## பிறைவானம்

முத்து தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தான். அவனைப் பெற்ற தந்தையோ, கவாத்து பழகும் சிப்பாயைப் போல இங்குமங்கும் நடந்து கொண்டிருந்தார்.

குழலோசையும், யாழ் ஒலியும் மழலைப் பேச்சுக்கு முன்னே எம் மாத்திரம் என்பார்களே, அதை உணராதவரோ அத் தந்தை !

இருக்கலாம்; இருக்கலாம்! அதோ பாருங்கள், வாடிய தாமரையைப் போல சோம்பிக் கிடக்கும் அந்தச் சிறுவனின் முகத்தை! அதிலேதான் எத்தனை ஏக்கம்—ஏமாற்றம்! பிஞ்சு மனதல்லவா, நினைத்தது கிடைக்கா விட்டால் பொறுக்குமா? பல ஆயிரம் மைல் சுற்றளவுள்ள 'அம்புலி'யை 'பிடித்துத் தா கையில்!' என்று பிடிவாதம் செய்யும் விசித்திர மனதாயிற்றே அது!

"அப்போவ்..."

பரிதாபமாக எழும்பியது முத்துவின் குரல் !

"ஐயோ!... ஐயோ!... ஐயோ!... ஏண்டா தொந்தரவு செய்யிறே?"—பெற்றவர்தான் பேசினார்; இல்லை ஏசினார்! அவருக்கென்ன தொல்லையோ! தொல்லை இருக்கத்தான் வேண்டும்—கலவரம் சூழ்ந்த அவரது முகத் தோற்றம் அப்படித்தான் சொல்லுகிறது. அடிக்கொரு முறை தெருவை நோக்கும் அவரது குழப்பம் நிறைந்த விழிகள் அதை ஆமோதிக்கின்றன!

"பந்துப்பா... பக்கத்து வீட்டு பாலு வச்சிருக்காம்ப்பா... எனக்கும்ப்பா... வாங்கித்..."

அவன் தனது 'வேண்டுகோளை' முடிக்கவில்லை. அதற்குள் தெருவில் ஏதோ குரல் எழும்பியது:

"பேரன்பு கொண்டோரே! பெரியோரே! பெற்ற தாய்மார்களே! நல் இளஞ் சிங்கங்காள்! உங்களுக்கெல்லாம் ஒரு தேன் செய்தி! நாளை... இந்த நகருக்கோர் திருநாள்! 'சிந்திப்பாய் ஜெகமே' என வேண்டும் பெருநாள்!... ஏரோட்டும் மக்களெல்லாம் ஏங்கித் தவிக்கையிலே தேரோட்டம் ஏன் உனக்கு தெய்வமே?—கூழுக்கும் வழியின்றி கூவியழும் பாலகர் முன், ஆண்டவனே, உனக்கு மட்டும் ஆறு கால பூசையா? அநியாயம்! அநியாயம்! அடுக்குமா இந்த அநீதி ?—எனக் கேள்வி எழுப்பி, விடை நாடும் மாநாடு! நாளை ஆலை மைதானத்திலே 'பகுத்தறிவு' மாநாடு ! அங்கே சீர்திருத்தத் தேனேடும்! ஆகவே சிந்திக்கக் கூடுவீர் ! தவறாது வருவீர்! அறிவு விளக்கம் பெறுவீர்!..."

இப்படி அலறியது 'மைக்'!

அப்பாவின் முகத்திலே ஆத்திரம் தாண்டவமாடியது! "..ம்..மாநாடாம் மாநாடு!" என்று உறுமினர் அவர்.

புரியாது விழித்தான் பாலகன். "என்னப்பா அது, பெரிய்...ய்...ய சத்தம்?" என்று கேட்டான்.

"இது ஒரு சத்தமா? நாளைக்குப் பார் சத்தத்தை!"—அப்பா ஏதோ அர்த்தத்தோடு பேசினர். அவரது கொந்தளிக்கும் உள்ளத்திலே அடித்துக் கொண்டிருந்த சூறுவளியை பையன் எப்படி அறிவான்?

"இதைவிடப் பெரிசா இருக்குமாப்பா?..." என்றான் ஆச்சரியத்துடன்.

அதற்குள் திபுதிபுவென்று சிலர் உள்ளே புகுந்தனர்.

"ஜமீன்தார்வாள்! கேட்டேளா, கேட்டேளா? அநியாயம் வந்துடுத்து!" என்று அலறினர் ஒருவர்.

அவரது உடையும் உருவமும் 'தெரியவில்லையா, நான்தான் பெரிய கோயில்குருக்கள்' என்று சொல்லிற்று!

"ஆண்டவனுக்கு ஆறு கால பூஜை எதற்காக? தேரோட்டம்! வீணுட்டமாம் என்ன அக்கிரமம் !" — இப்படித் துடித்தார் ஒருவர், நெற்றியிலே பட்டையாக இருந்த 'விபூதி' வியர்வையில் வழிந்தோடியதைக்கூட கவனியாமல்!

"கூடாது; கூடாது! இதை விடவே கூடாது !..."

"பகுத்தறிவாம்; சீர்திருத்தமாம்! பரதேசிகள்—பார்க்கத்தான் வேண்டும் ஒரு கை! "

"பகுத்தறிவு மாநாடாம்! எவ்வளவு பெரிய பந்தல் தெரியுமா ? மேடையும் அலங்கரிப்பும்...அப்பப்பா! நாடே காடாகப் போகிறது! பிரளயம்தான் வரப்போகிறது!"

—இப்படிக் கதறின பல குரல்கள்!

"நிறுத்துங்கள்; நிறுத்துங்கள்! நான் உயிரோடு இருக்கும்வரை இந்த அநியாயம் நடக்கவிடுவேனு?

மாநாடு நாளைக்கா ?...ஹா...ஹா...ஹா..."-ஜமீன்தார் இப்படி உறுமினர்.

வந்தோர் போயினர், ஏதோ தீர்மானத்தோடு!

சிறுவனுக்கு திடீரென்று பந்தின் ஞாபகம் வந்துவிட்டது. "அப்பா... பந்துப்பா! நான் எத்தனை நாழியா கேக்கிறேன்!" சந்தர்ப்பம் தெரியாது வழக்கம்போல் நச்சரித்தான் சிறுவன்.

"சீ...சீ!... போடா கழுதை! பந்தாம் பந்து!..." என்று சீறி விழுந்தார் அப்பா!

முத்து விம்மி அழத் தொடங்கினான். தூரத்திலே "பேரன்பு கொண்டோரே..." — என்ற குரல் எழும்பியது! ஜமீன்தார் மீசையும் புருவமும் துடிதுடிக்க எங்கேயோ சென்றார்!

★

ஏண்டா, கருப்பா! இப்போ கையிலே எத்தனை இருக்கு?"—என்று அதிகாரத் தோரணையில் கேட்டார் ஜமீன்தார்.

"இருபது இருக்குங்க!"–எதிரே கை கட்டி வாய் புதைத்து நின்ற கருப்பன் சொன்னான்.

"பாக்கி எல்லாம்?..."

"கழுகுமலைக் கள்ளர்களுக்கு இருபத்தைந்து அனுப்பினேன். நீங்கதான் சொல்லி அனுப்பிச்சிங்களே, பூபதிக்கு பத்து தந்தேன்..."

"சரி...இருபது போதும்! நான் சொன்னதெல்லாம் நினைவிருக்கா ? நாளைக்குக் காலையிலே மாநாடு ஆரம்பிப்பானுங்க; கூட்டமெல்லாம் முழுக்கக் கூடினவுடனே ஒவ்வொரு மூலையிலேயிருந்தும் 'ஜிவ்'வுன்னு பறக்கணும்! அம்புட்டுக் கக்கூடாது! தெரியுதா? அந்த 'இருபதை'யும் என் அறையிலே கொண்டு வந்து வை!" என்று உத்தரவு போட்டார் ஜமீன்தார் !

மறுநாள் பகுத்தறிவு மாநாட்டுக்குப் பங்கம் விளைவிக்கப் போகும் அந்த 'இருபது'தான் என்ன?

தூரத்திலே, "ஆண்டவனே! உனக்கு மட்டும் ஆறுகாலபூஜையா? அநியாயம்! அநியாயம்!..." என்ற குரல் தேய்ந்து ஒலித்துக் கொண்டிருந்தது.

ஜமீன்தார் பயங்கரமாக சிரித்தார் !

"டாண்...டாண்!" என்று ஒலித்தது கோயில் மணி! சாயங்கால பூஜை போலும்; ஜமீன்தார் வேகவேகமாக கோயிலுக்குப் புறப்பட்டார்!

★

"பந்து... பந்து..." என்று அழுது முத்துவின் முகமே பந்து போல வீங்கிவிட்டது. அவனது குரலுக்கு மதிப்பளிக்கும் நிலையிலா அப்பா இருக்கிறார்?

பக்கத்து வீட்டு பாலு பந்தடித்து விளையாடிக் கொண்டிருந்தான்; முத்து அவனைக் கேட்டான்—கெஞ்சினான்! தருவானு, அவன்? "அதோ, எங்க அப்பா வர்றார், நான் தர மாட்டேன்!" என்று கோவிலிலிருந்து திரும்பிக் கொண்டிருந்த குருக்களை கை நீட்டி காட்டிவிட்டு, வீட்டுக்குள் புகுந்து விட்டான்!

முத்துவுக்கு கோபம் பீறிட்டுக் கொண்டு வந்தது. என்ன செய்வான்? வீட்டுக்குள் ஓடினான். படுக்கையிலே 'தொப்'பென்று விழுந்தான். அப்படியே கண்ணயர்ந்தான்.

மறுபடி அவன் கண் விழித்தான்; அப்போதும் "பந்து... பந்து..." என்று முணகிக் கொண்டே. பாவம், தூக்கத்தில் கூட அவன் ஏக்கம் மறையவில்லை.

கண் விழித்த அவன் தனது தந்தையின் அறையிலே விளக்கு எரிந்து கொண்டிருப்பதைப் பார்த்தான். மறுகணம் ஆச்சரியத்துடன் கவனித்தான்.

அங்கே....

அவனது தந்தை எதையோ எடுத்து அலமாரியில் வைத்துக் கொண்டிருந்தார். அது அந்த 'இருபது'தானே?

"ஆ...பந்து!" என்று முணுமுணுத்தான் முத்து. 'பொல்லாத அப்பா, வச்சுகிட்டே எனக்குத் தரலியே-இருக்கட்டும் இருக்கட்டும்! [illegible]ங்கட்டும், பாத்துக்கிறேன்' என்றான். இப்போது அவன் முகத்திலே படர்ந்திருந்த சோகம் எங்கேயோ 'மாய்'மாய் மறைந்து விட்டது; அவனுக்கு கொள்ளை மகிழ்ச்சி; தானகவே சிரித்துக் கொண்டான்! பாவம், பிஞ்சு மனம், அந்த மகிழ்ச்சிக்குள்ளே மறைந்து கொண்டிருக்கும் பாழும் பயங்கரத்தை — படுநாசத்தை அவன் அறிவானு ?

அவன் மட்டுமென்ன, அதோ— "நாளை ஆலை மைதானத்திலே பகுத்தறிவு மாநாடு! அங்கே சீர்திருத்தத் தேனேடும்! சிந்திக்கக் கூடுவீர்! கூடுவீர்!" என்று அறை கூவி அழைக்கிறார்களே, அந்த நள்ளிருட்டிலும், அவர்களுக்கும் தெரியாது !

"இந்தச் சூரியன் இன்று ஏன் தாமதம் செய்கிறான் ? எப்போது வருவான்? எப்போது பொழுது புலரும் ?' என்று காத்திருக்கிறார்களே ஆயிரமாயிரம் மக்கள், அவர்களுக்கும் தெரியாது. ஜமீன்தாரின் மாளிகையிலே பிறந்து விட்ட பயங்கரம்!

அப்பாவின் அறை விளக்கு அணைந்தது. முத்து மெதுவாகத் தன் படுக்கையை விட்டு எழுந்தான். அடிமேல் அடி வைத்து பூனைபோல் நடந்து சென்றான். அப்பாவின் அறைக்குள் நுழைந்தான். அலமாரியைத் திறந்தான். கையை வைத்துத் தேடினான்.

மறுகணம், 'ஏ அப்பா! எத்தனை பந்துகள் !' என்று வியந்தான். ஆனால் ஒன்றே ஒன்றை மட்டும் கையில் எடுத்துக் கொண்டான். வந்த சுவடு தெரியாமல் திரும்பினான் !

நல்ல நிலா ! தெருவுக்கே வந்து விட்டான் முத்து. கையிலே 'பந்து'—சந்திரனைப் பார்த்தான். "ஏ, அம்புலி! இதோ பார்த்தாயா பந்து ! நம்ப விளையாடலாமா? இந்தா, நான் வீசி எறியறேன்; நீ புடிச்சுக்கோ!" என்றான்—கலகலவென சிரித்தான். 'பந்தை' ஆகாயத்தில் வீசி எறிந்தான்.

'பந்து' மேலே போனது; கீழே வந்தது !

விழுந்தது !

மறுகணம்...

'டுமீல்' என்ற ஒரு பயங்கர சப்தம்!

முத்துவின் "ஐயோ" என்ற கோர அலறல்!

ஒரே தீ! இடிமுழக்கம்! படுநாசம்! ஜமீன்தார் வீட்டின் முன்பகுதி பொலபொலவென இடிந்தது !

முத்துவைக் காணேம்!

அப்பா அலறி எழுந்தார்! பறந்து வந்தது போலீஸ்! ஊர் கூடியது!

★

பொழுது விடிந்தது!

'நல்லவர்' என்ற போர்வையிலே நாட்டு வெடிகுண்டுகள் தயாரித்து, திருடர்களுக்கு விற்பனை செய்து வந்த குடிகேடி பிடிபட்டான் —போலீசாருக்கு இந்த மகிழ்ச்சி!

'எப்படிச் சிக்கினேம்'—இரும்புக் கம்பிகளுக்கிடையே புலம்பிக்கொண்டிருந்த ஜமீன்தாருக்கு இந்த வேதனை!

இதற்கிடையில் 'பகுத்தறிவு மாநாடு' வெற்றியுடன் நடைபெற்றது!

**ஆனல், அங்கு கூடியிருந்த ஆயிரக்கணக்கானேரை சாவிலிருந்து காப்பாற்றிய முத்துவோ—'பந்து, பந்து' என்று அழுது புலம்பிய அந்தப் பச்சிளம் பாலகனின் உடலோ — எரிகுண்டு தாக்குதலால் சிதறி-சின்னபின்னமாகி—எறிந்து — காய்ந்து — கருகி—மறைந்தே விட்டது!**

—சொர்ணம்.



இந்த வாரம் பரிசு பெறும் தோழர்,
(★) எஸ். கே. சாமி,
மதுரை.
(முழு விலாசம் தெரிவிக்க வேண்டுகிறோம்)

எம். ஆர். நாதன்; சென்னை-1.

(?) மந்திரி சுப்ரமணியத்துக்கு இல்லாதது என்னென்ன?

முப்புரி நூலும், கருப்பு மூக்குக் கண்ணாடியும்தான்!

ஊ. கு. பழனிச்சாமி; ஊத்துப்பட்டி.

(?) காமராசரின் சிஷ்யர் யார்?

'சந்திரன' போன்ற சிஷ்யர்கள் அவருடைய குரு பீடத்தில் ஏராளமாக இருக்கிறார்கள்!

மு. தனலக்ஷ்மி; நவல்பூர்.

(?) பெண்கள் முன்னேற்றத்துக்கு காங்கிரஸ் பாடுபடுகிறதா?

ஆமாம்; பாடுபடுகிறது, விஜயலட்சுமிப் பண்டிதரின் திருக்குமரிகளுக்கு 'பால் டான்ஸ்' கற்றுக் கொடுத்து!

என். பி. அண்ணன்; மதுரை.

(?) இந்தியாவிற்கும், பாகிஸ்தானுக்கும் யுத்தம் தோன்றினால் தி. மு. க. யாரை ஆதரிக்கும்?

எதிரிக்கு எதிரி நண்பன் என்பது எம்கொள்கையல்ல, தோழரே!

(?) அண்மையில் மலையாளப் பகுதியில் நடைபெறும் கம்யூனிஸ்ட் கட்சி மாநாட்டை அரசாங்க செய்திப் பட இலாக்கா படமாக்கியிருக்கிறதாமே?

ஏக பாரதக் கொள்கையைப் பொறுத்தவரையில் அவர்களுக்கும் ஆளும் கட்சிக்கும் என்ன வித்தியாசம்? அதனால் தான் பயப்படாமல் படமாக்குகிறார்கள் அரசாங்கத்தார்!

(★) எஸ். கே. சாமி; மதுரை.

(?) கை காட்டி மரத்துக்கும், கட்சித் தலைவனுக்கும் என்ன வித்தியாசம்?

கைகாட்டி மரம் நின்ற இடத்திலிருந்தபடியே வழி காட்டிவிடும்; ஆனால் பொறுப்புள்ள தலைவர்களோ இலட்சிய புரியை அடையும் வரை வழி காட்டுவதோடு கூடவே துணைக்கும் வருவார்கள்!

ராமு; வேதாரண்யம்.

(?) முள்ளில் ஏன் ரோஜா இருக்கிறது?

ஏதோ முட்செடியில் மலர் இருக்கிறதே என்று நாம் சாந்தி அடையத்தான்!

கே. ஆறுமுகம்: சென்னை.

(?) 13—4—56 'திராவிடன்' பத்திரிகையில்... 8-ம் பக்கத்தில் "பழைய எண்ணமெல்லாம் இன்று ஏனோ கருணாநிதியிடம் இல்லை" என்று எழுதப்பட்டிருக்கிறதே; அதன் பொருள் என்ன?

பழைய எண்ணங்கள் இல்லை; புதுமை எண்ணங்கள் இருக்கின்றன என்றும் இருக்கலாம். அல்லது எண்ணெய் வளம் இல்லை என்பது அச்சுப் பிழையில் எண்ண வளம் என்றும் ஆகியிருக்கலாம்.

சே. வி. ஆறுமுகம்; பங்களூர்.

(?) இக் காலத்தில் மெய்ப் பொருள் கண்டு வாழ்பவர் யார்?

கையகராதி வைத்திருப்போரும், கள்ள நோட்டு அச்சிடுவோர்களும்!

கே. கே. பெருமாள்சாமி; கோட்டயம்.

(?) அதிர்ஷ்டம் என்பது என்ன?

சந்தர்ப்பத்திற்குப் பூசப்படும் தெய்வீக முலாம்!

---

விருத்தாசலம் சண்முகா திறந்த வெளி அரங்கில்

இலட்சிய நடிகர்,

**எஸ். எஸ். ராஜேந்திரன்**

நடிக்கும் நாடகங்கள்.

2—5—56 புதன் இரவு 10 மணிக்கு

அறிஞர் அண்ணா அவர்கள் தலைமையில்,

**மணிமகுடம்**

3-5-56 வியாழன் இரவு 10 மணிக்கு

மு. கருணாநிதி அவர்கள் தலைமையில்

**புது வெள்ளம்**

புதிய சமூக சீர்திருத்த நாடகம்.

---

திராவிடர் வரலாற்றில் ஒரு திருப்புமுனை!

★ திராவிடம் வளம் பெறவும்

★ திராவிடர் நலம் பெறவும்

★ அதற்கான திட்டம் தீட்டி செயல் படுத்தவும்

**மே 17, 18, 19, 20 தேதிகளில்**

**திருச்சி**

**பந்தயத் திடலில்**

('ரேஸ் கோர்ஸ்' ஜமால் முகமது கல்லூரி அருகில்)

**தி. மு. கழக 2-வது**

**மாநில மாநாடு**

நடைபெறும்.

★

பொதுச் செயலாளர்

**இரா. நெடுஞ்செழியன்**

தி. மு. கழகச் சொற்பொழிவாளர்கள் அனைவரும் நாட்டு விடுதலை குறித்து நல்லுரை ஆற்றுவர்.

**திரண்டு வாரீர்!**

வரவேற்புக் குழு.

---

### நீலவெளி

22—4—56 ஞாயிறு மாலை 6-மணிக்கு, நடைபெறும் தி. மு. கழக துவக்க விழாவில் தோழர் என. கிட்டப்பா அவர்கள் தலைமையில், தோழர்கள் ஏ. வி. பி. ஆசைத்தம்பி, சி. ஜம்பு. கே. எஸ். சௌந்தரராசன் ஆகியோர் பேசுவர்.

### நரசிங்கன் பேட்டை

23—4—56 திங்கள் மாலை 6—மணிக்கு நடைபெறும் தி. மு. கழக துவக்க விழாவில், தோழர் கோ. சி. மணி அவர்கள் தலைமையில், துணைப் பொதுச் செயலாளர் என். வி. நடராசன். தோழர் என். கிட்டப்பா—ஆகியோர் பேசுவர். தோழர் கே. எஸ். சௌந்தரராசன் கொடியேற்றுவார்.

### நெடுங்குளம்

24—4—56 செவ்வாய் மாலை 6—மணிக்கு, தோழர் நிரவி இரத்தின வேலு அவர்கள் தலைமையில், துணைப் பொதுச் செயலாளர் என். வி. நடராசன், தோழர்கள் என். கிட்டப்பா, கே. எஸ். சௌந்தரராசன்—ஆகியோர் பேசுவர்.

### பெங்களூர்

இலக்குமணபுரி திராவிட முன்னேற்ற கழக வளர்ச்சிக் காக சிறப்புக்கூட்டம் 24-4-56 ஞாயிறு மாலை 5 மணியளவில். சர் புட்டண்ணா செட்டி டவுன் ஹாலில் தோழர் எஸ். வி. பதி அவர்கள் தலைமையில், பொதுச் செயலாளர் நாவலர் இரா. நெடுஞ்செழியன் எம். ஏ., புரட்சி நடிகர் எம். ஜி. இராமச்சந்திரன்—ஆகியோர் சிறப்புச் சொற்பொழிவாற்றுவர். கட்டணம்: 1-0-0, 0-8-0.

### இராமனுதபுரம்

26—4—56 வியாழன் மாலை 5—மணிக்கு, அரண்மனை முன்பு, தோழர் எம். எஸ். இராமசாமி அவர்கள் தலைமையில் அறிஞர் அண்ணா அவர்கள் பேசுவார்கள்

### மேட்டுநீரடுந்தன் சோழவந்தான்

27-4-56 வெள்ளியன்று தோழர் கே. காசி அவர்கள் தலைமையில் கவிஞர் கண்ணதாசன், தோழர்கள் சமதர்மம், மதுரை முத்து—ஆகியோர் பேசுவர்.

---

**மே 15 முதல் வெளிவருகிறது!**

O சுயமரியாதைச் சுடர்!

O பகுத்தறிவுப் பாசறை!

O இன்ப திராவிடத்தின் இலட்சிய ஏடு!

**"களஞ்சியம்"**

(மாதமிருமுறை இதழ்)

எங்கும் நல்ல ஏஜண்டுகள் தேவை.

விவரங்களுக்கு:
4, பரமானந்த முதலி தெரு,
சென்னை-1.

ஆசிரியரும், அச்சிடுபவரும், வெளியிடுபவரும் மு. கருணாநிதி, 'முரசொலி' அச்சகம், 4/128, மவுண்ட்ரோடு, சென்னை-2

